1 கோடிக்கும் மேல் விற்பனையாகியுள்ள புத்தகம்

உங்கள் வேலையிலும் உங்கள் வாழ்க்கையிலும் ஏற்படும் மாற்றங்களைத் திறம்படக் கையாள்வதற்கான ஒரு வியத்தகு வழி

# என் சீஸை நகர்த்தியது யார்?




ஸ்பென்சர் ஜான்சன், எம்.டி.

அறிமுகம்: கென்னத் பிளான்சார்டு, பிஎச்.டி.


உலகின் மிகப் பிரபலமான நிர்வாக முறையை எடுத்துரைக்கும் 'ஒன் மினிட் மேனேஜர்' புத்தகத்தின் இணையாசிரியர்கள்

Tamil translation of
**Who Moved My Cheese?** by Spencer Johnson, M.D.

தமிழில்: நாகலட்சுமி சண்முகம்



# என் சீஸை நகர்த்தியது யார்?

## உங்கள் வேலையிலும் உங்கள் வாழ்க்கையிலும் ஏற்படும் மாற்றங்களைத் திறம்படக் கையாளுவதற்கான ஒரு வியத்தகு வழி


## ஸ்பென்சர் ஜான்சன், எம்.டி.


தமிழில்: நாகலட்சுமி சண்முகம்





மஞ்சுள் பப்ளிஷிங் ஹவுஸ்

Dedicated to my friend Kenneth Blanchard, Ph. D., whose enthusiams for this story encouraged me to write this book, and whose help brought it to so many people.

*First published in India by*



**Manjul Publishing House**

*Corporate and Editorial Office*

2 Floor, Usha Preet Complex, 42 Malviya Nagar, Bhopal 462 003 - India

*Sales and Marketing Office*

7/32, Ansari Road, Daryaganj, New Delhi 110 002 - India Website: www.manjulindia.com

*Distribution Centres*

Ahmedabad, Bengaluru, Bhopal, Kolkata, Chennai, Hyderabad, Mumbai, New Delhi, Pune

Tamil translation of the international bestseller

*Who Moved My Cheese?* by *Spencer Johnson, M.D.*

This edition first published in 2002

Revised translation first published in 2012



This edition published by arrangement with G.P. Putnam's Sons, an imprint of Penguin Publishing Group, a division of Penguing Random House LLC

ISBN 978-81-86775-25-7

Translation by Nagalakshmi Shanmugam

Edited by PSV Kumarasamy

# உள்ளடக்கம்

எலிகள் மற்றும் மனிதர்களின் சிறந்த திட்டங்கள் அடிக்கடித் தடம் புரண்டுவிடுகின்றன.

**- ராபர்ட் பர்ன்ஸ் (1759 - 1796)**

* * *

வாழ்க்கை என்பது சுதந்திரமாகவும், தங்குதடையின்றியும் நாம் நடந்து செல்வதற்கான நேரான, சுலபமான தாழ்வாரம் அல்ல. மாறாக, வழி தடுமாறிக் குழம்பி, அவ்வப்போது முட்டுச் சந்துகளில் மாட்டிக் கொண்டு, நம் வழியை நாம் தேடிக் கொள்ள வேண்டிய, சிக்கல் நிறைந்த பல பாதைகளைக் கொண்ட ஒன்று.

நம்மிடம் விசுவாசம் இருந்தால், நமக்கென்று ஒரு கதவு எப்போதும் திறக்கும். அது நாம் கற்பனை செய்திருக்கும் கதவாக இல்லாமல் போகலாம். ஆனால் இறுதியில் நமக்கு நன்மை பயக்கும் ஒரு கதவாக அது இருக்கும் என்பது உறுதி.

**- ஏ.ஜே. க்ரானின் (1896 - 1981)**

* * *

## இந்த அற்புதமான புத்தகம் குறித்து . . .

“அத்தி பூத்தாற்போல் எப்போதாவது ஒரு புத்தகம் வந்து எதிர்காலத்திற்கான ஒரு கதவைத் திறக்கும். இப்புத்தகம் என்மீது அப்படிப்பட்டதொரு தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது.”

**- டேவிட் ஏ. ஹீனன், நிர்வாகக் குழு உறுப்பினர், பீட்டர் டிரக்கர் நிர்வாக மையம்**

“நான் இப்புத்தகத்தைப் படித்து முடித்தவுடன், குழுக்களில் ஏற்படும் மாற்றங்களில் துவங்கி, புதிய விற்பனைச் சந்தைகளை உருவாக்குவதுவரை, நாங்கள் எதிர்கொண்டிருந்த தொடர் மாற்றங்கள் பலவற்றைக் கையாள்வதற்கு, நான் இப்புத்தகத்தின் பல ஆயிரம் பிரதிகளை வாங்கி என் நிறுவனத்தில் விநியோகித்தேன்.”

**- ஜோன் பேங்க்ஸ், செயற்திறன் வல்லுனர், வர்ல்பூல் நிறுவனம்**

“இந்த அற்புதமான கதையை எங்கள் வீட்டு வரவேற்பறையில் உள்ள வெதுவெதுப்பான நெருப்பிற்கு அருகில் அமர்ந்து, என் குழந்தைகளுக்கும் என் பேரக்குழந்தைகளுக்கும் நான் படித்துக் காட்டுவதையும், இதிலுள்ள பாடங்களை அவர்கள் புரிந்து கொள்வதையும் என் மனத்தில் என்னால் காட்சிப்படுத்திப் பார்க்க முடிகிறது.”

**- லெப்டினன்ட் கர்னல் வெய்ன் வாஷர், வானூர்தி அறிவியல் மையம், பேட்டர்சன் ஏஎஃப்பி**

“டாக்டர் ஜான்சன் இப்புத்தகத்தில் படைத்துள்ள கவர்ந்திழுக்கும் கதாபாத்திரங்களும் அவரது வார்த்தைப் பிரயோகங்களும் மாற்றத்தைக் கையாள்வதற்கான சக்தி வாய்ந்த, சிறந்த வழியை நமக்குக் கற்று கொடுக்கின்றன.”

**- ஆல்பர்ட் ஜே. சிமோன், தலைவர், ராச்செஸ்டர் தொழில்நுட்பக் கழகம்**

“ஸ்பென்சர் ஜான்சனின் தனித்துவமிக்க உள்நோக்குகளும், கதை சொல்லும் திறனும், எண்ணற்ற மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் இந்த நேரத்தில் சிறந்து விளங்க விரும்பும் அனைவரும் விரைவில் படித்துப் புரிந்து கொள்ளும்படியான ஓர் அரிய புத்தகமாக இப்புத்தகத்தை ஆக்குகின்றன.”

**- ரேன்டி ஹாரிஸ், முன்னாள் துணைத் தலைவர், மெரில் லின்ச் இன்டர்நேஷனல்**

"நம் சொந்தச் சூழல்களில் நிகழும் மாற்றங்களை நாம் கையாள்வதற்குப் பயன்படுத்தக்கூடிய ஓர் எளிமையான, எளிதில் புரிந்து கொள்ளும்படியான ஒரு வழிகாட்டியாக இப்புத்தகம் விளங்குகிறது."

**- மைக்கேல் மார்லி, துணைத் தலைவர், ஈஸ்ட்மேன் கோடாக்**

"இதில் கூறப்பட்டுள்ள பாடங்களை நடைமுறைப்படுத்தத் துவங்கும் எவரொருவருக்கும் இந்த அற்புதமான புத்தகம் ஒரு விலைமதிப்பற்ற சொத்தாக விளங்கும்."

**- ஜான் ஏ. லோபியானோ, துணைத் தலைவர், ஜெராக்ஸ் நிறுவனம்**

# பதிப்பாளர் குறிப்பு

தன் வாழ்வில் ஏற்பட்ட ஒரு கடினமான மாற்றத்தைக் கையாள்வதற்காக டாக்டர் ஸ்பென்சர் ஜான்சன் 'என் சீஸை நகர்த்தியது யார்?' என்ற கதையை உருவாக்கினார். தன்னைத் தீவிரமாக எடுத்துக் கொள்ளாமல், மாறிக் கொண்டிருந்த தன் சூழ்நிலையை எவ்வாறு தீவிரமாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை இக்கதை அவருக்குக் காட்டியது.

அவரது வாழ்க்கை மிகவும் சிறப்பாக மாறியிருந்ததைக் கண்ட அவரது நண்பர்கள், அது எவ்வாறு நிகழ்ந்தது என்று அவரிடம் கேட்டபோது, அவர் தனது 'சீஸ்' கதையை வெளிப்படுத்தினார். தங்கள் நகைச்சுவை உணர்வைத் தக்க வைத்துக் கொள்வதற்கும், மாற்றத்தைத் துணிச்சலாக எதிர்கொண்டு, தங்களை மேம்படுத்திக் கொள்வதற்கும் இக்கதை பெரிதும் உதவியதாகப் பல வருடங்களுக்குப் பிறகும்கூட பலர் அவரிடம் தெரிவித்தனர். அவர் எழுதிய 'த ஒன் மினிட் மேனேஜர்' புத்தகத்தின் இணை ஆசிரியரான கென் பிளான்சார்டு, இக்கதையைப் பலரிடம் பகிர்ந்து கொள்வதற்காக இப்புத்தகத்தை எழுதுமாறு டாக்டர் ஸ்பென்சர் ஜான்சனைப் பெரிதும் ஊக்குவித்தார்.

இக்கதை உருவாக்கப்பட்டு இருபது வருடங்களுக்குப் பிறகு, 'என் சீஸை நகர்த்தியது யார்?' என்ற இப்புத்தகம் வெளியிடப்பட்டது. விரைவில், சிறப்பாக விற்பனையாகும் புத்தகங்களின் வரிசையில் சேர்ந்தது. இப்புத்தகம் முதல் பதினாறு மாதங்களுக்குள் பத்து இலட்சம் பிரதிகள் விற்பனையாகி, அடுத்த இரண்டு வருடங்களில் ஒரு கோடிப் பிரதிகள் விற்பனையானது.

இக்கதையில் தாங்கள் கண்டறிந்த விஷயம் தங்கள் தொழில் வாழ்க்கையையும், வியாபாரத்தையும், ஆரோக்கியத்தையும், திருமணத்தையும் மேம்படுத்த உதவியது என்று பலர் தெரிவித்தனர். 'சீஸ் கதை' வீடுகளிலும், நிறுவனங்களிலும், பள்ளிகளிலும், தேவாலயங்களிலும், இராணுவத்திலும், விளையாட்டு அணிகளிலும் நுழைந்து தனக்கென்று ஓர் இடத்தைப் பிடித்து வைத்துள்ளது. உலகம் முழுவதிலும் பல மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டு உலகளாவிய ஒன்றாக அது உருவாகியுள்ளது.

மறுபுறம், இது பல மக்களுக்கு எவ்வாறு மதிப்பு மிக்கதாக விளங்குகிறது என்று புரியாமல் விமர்சகர்கள் குழம்பிக்

கொண்டிருக்கின்றனர். குழந்தைகள்கூட மூளையைக் கசக்காமல் புரிந்து கொள்ளும் வகையில் இக்கதை ஆழமற்று இருப்பதாகவும், அது பொது அறிவு சார்ந்த மிகச் சாதாரணமான ஒரு விஷயமாக இருப்பதால், தங்களது புத்திசாலித்தனத்தை எள்ளி நகையாடுவதாக இருப்பதாகவும் அவர்கள் எண்ணுகின்றனர். இந்தக் கதையிலிருந்து தங்களுக்கு எந்தவொரு கருத்தும் கிடைக்கவில்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர். அனைத்து மாற்றங்களும் நல்லதற்கே, மற்றவர்களால் திணிக்கப்படும் மாற்றங்களைக்கூட மக்கள் கண்மூடித்தனமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று இப்புத்தகம் பரிந்துரைப்பதாக சிலர் பயப்படுகின்றனர். ஆனால் இப்புத்தகத்தில் எந்த இடத்திலும் அப்படிப்பட்டக் கருத்து கூறப்படவில்லை.

இப்புத்தகத்தின் ரசிகர்கள் மற்றும் விமர்சகர்களின் கருத்துக்கள், அவரவர் சொந்தக் கண்ணோட்டங்களில் சரியானவையே என்று இதன் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இக்கதையில் கூறப்பட்டுள்ள விஷயம் இப்புத்தகத்திற்கு மதிப்புக் கூட்டுவதில்லை. மாறாக, அதில் கூறப்பட்டுள்ளதை நீங்கள் எப்படிப் புரிந்து கொள்கிறீர்கள், அதை உங்கள் வாழ்வில் எப்படி நடைமுறைப்படுத்துகிறீர்கள் என்பதுதான் அதை மதிப்பு மிக்கதாக ஆக்குகின்றது.

இக்கதையை நீங்கள் புரிந்து கொள்ளும் விதமும், அதை உங்கள் வாழ்வில் நீங்கள் செயல்படுத்தும் விதமும் உங்களுக்கான 'புதிய சீஸை' நீங்கள் கண்டுபிடித்து அனுபவிக்க உதவும் என்று நம்புகிறோம்.

# இக்கதையின் கதாபாத்திரங்கள்

இக்கதையில் சித்தரிக்கப்பட்டுள்ள நான்கு கற்பனைக் கதாபாத்திரங்களான "ஸ்னிஃப்" மற்றும் "ஸ்கரி" ஆகிய சுண்டெலிகளும், "ஹெம்" மற்றும் "ஹா" ஆகிய குட்டி மனிதர்களும், நம் வயது மற்றும் இனம் எதுவாக இருந்தாலும் சரி, நாம் எந்த நாட்டைச் சேர்ந்தவராக இருந்தாலும் சரி, நாம் ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி, நம் அனைவருக்குள்ளும் இருக்கும் எளிமையான மற்றும் சிக்கலான அம்சங்களைப் பிரதிபலிக்கும் விதத்தில் உருவாக்கப்பட்டுள்ளன.

சமயங்களில், மாற்றத்தை முன்னதாகவே மோப்பம் பிடித்துவிடும் "ஸ்னிஃப்" சுண்டெலியைப்போல் நாம் நடந்து கொள்ளக்கூடும்; அல்லது வேகமாகச் செயலில் குதிக்கும் "ஸ்கரி"யைப்போல் நடந்து கொள்ளக்கூடும்; அல்லது அந்த மாற்றம் ஏதோ ஒரு மோசமான விளைவை ஏற்படுத்தப் போவதாக பயந்து, அந்த மாற்றத்தை மறுத்து, அதை எதிர்க்கும் "ஹெம்"மைப் போல் நாம் நடந்து கொள்ளக்கூடும்; அல்லது மாற்றம் ஏதாவது ஒரு சிறந்த விளைவிற்கு வழிவகுக்கக்கூடும் என்பதைக் கண்டுகொண்டு, குறித்த நேரத்தில் அந்த மாற்றத்திற்கு ஏற்பத் தன்னை மாற்றிக் கொள்ளும் "ஹா"வைப்போல் நாம் நடந்து கொள்ளக்கூடும்.

இந்த நான்கு அம்சங்களில் நாம் எதைப் பயன்படுத்தத் தேர்ந்தெடுத்தாலும் சரி, நாம் அனைவரும் ஒரு பொதுவான விஷயத்தைப் பகிர்ந்து கொள்கிறோம்: சிக்கலான பாதையில் நம் வழியைக் கண்டுபிடித்து, மாறிக் கொண்டிருக்கும் காலகட்டங்களில் வெற்றி பெறுவதற்கான ஒரு தேவைதான் அது.

## கதை பிறந்த கதை

### கென்னத் பிளான்சார்டு, பிஎச்.டி.

'என் சீஸை நகர்த்தியது யார்?' என்ற கதையின் பின்னால் உள்ள கதையைக் கூறுவது எனக்குப் பெரும் சிலிர்ப்பை ஏற்படுத்துகிறது. ஏனெனில், இப்போது இப்புத்தகம் எழுதப்பட்டுவிட்டது, நாம் அனைவரும் படித்து மகிழ்ந்து, மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்வதற்காக நமக்குக் கிடைத்துள்ளது என்பதுதான் அதற்குக் காரணம்.

நானும் ஸ்பென்சர் ஜான்சனும் இணைந்து 'ஒன் மினிட் மேனேஜர்' என்ற புத்தகத்தை எழுதுவதற்குப் பல வருடங்களுக்கு முன் ஸ்பென்சர் ஜான்சன் இக்கதையை என்னிடம் கூறினார். அந்த நாள் முதலாகவே இப்புத்தகம் வெளிவர வேண்டும் என்று நான் விரும்பி வந்துள்ளேன்.

இக்கதை ஒரு புதிர்க் கட்டத்திற்குள் நடைபெறும் மாற்றத்தைப் பற்றியது. அங்கு நான்கு வினோதமான கதாபாத்திரங்கள் 'சீஸை'த் தேடி அலைகின்றன. இங்கு 'சீஸ்' என்பது ஓர் உருவகம். அது நம் வாழ்வில் நாம் பெற விரும்பும் ஒரு பொருளைக் குறிக்கிறது. அது ஒரு வேலை, ஓர் உறவு, பணம், ஒரு பெரிய வீடு, சுதந்திரம், ஆரோக்கியம், அங்கீகாரம், ஆன்மீக அமைதி, கோல்ஃப், அல்லது ஜாகிங் போன்ற எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்.

சீஸ் குறித்து நம் ஒவ்வொருவருக்கும் ஒரு தனிப்பட்ட யோசனை இருக்கக்கூடும். அதை நாம் முனைப்புடன் தேடுவதற்குக் காரணம், அது கிடைத்துவிட்டால் நாம் மகிழ்ச்சி அடைவோம் என்னும் நமது நம்பிக்கைதான். ஒருவேளை நாம் அதைப் பெற்றுவிட்டால், அதன்மீது நமக்குப் பற்றுதல் ஏற்பட்டுவிடுகிறது. அதை இழந்துவிட்டாலோ அல்லது அது நம்மிடமிருந்து பறிக்கப்பட்டுவிட்டாலோ, அது நமக்குக் கலக்கத்தை ஏற்படுத்துகிறது.

இக்கதையில் வரும் புதிர்க் கட்டம், நீங்கள் விரும்பும் விஷயத்தைத் தேடுவதற்கு எந்த இடத்தில் உங்கள் நேரத்தைச் செலவிடுகிறீர்களோ அந்த இடத்தைக் குறிக்கிறது. அது நீங்கள் வேலை பார்க்கும் நிறுவனமாக இருக்கலாம், நீங்கள் வாழும் சமூகமாக இருக்கலாம், அல்லது உங்கள் வாழ்வில் நீங்கள் பெற்றுள்ள உறவுகளாக இருக்கலாம்.

நீங்கள் படிக்கவிருக்கும் இந்த சீஸ் கதையை உலகம் முழுவதிலும் நான் ஆற்றும் உரைகளில் எடுத்துக் கூறுகிறேன். அந்தக் கதை தங்கள் வாழ்வில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியிருப்பதாகப் பின்னாளில் பலர் கூறுவதை நான் அடிக்கடிக் கேட்டிருக்கிறேன்.

நீங்கள் நம்புகிறீர்களோ இல்லையோ, பலரது வேலைகளிலும், திருமணங்களிலும், வாழ்க்கையிலும் மேம்பாட்டை ஏற்படுத்தியுள்ளதாக இச்சிறிய கதைக்கு ஒரு நற்பெயர் கிடைத்துள்ளது.

இதை உறுதி செய்யும் பல உண்மைக் கதைகளில் ஒன்றுதான் சார்லி ஜோன்ஸ் என்பவருடையது. அவர் என்பிசி தொலைக்காட்சியில் மிகவும் மதிக்கப்பட்ட ஓர் ஒளிபரப்பாளராக இருந்தார். சீஸ் கதையைத் தான் கேட்டது தன் வேலையைக் காப்பாற்றியதாக அவர் தெரிவித்தார். ஓர் ஒளிபரப்பாளர் என்ற முறையில் அவரது வேலை தனித்துவமானது என்றாலும், அவர் கற்றுக் கொண்ட கொள்கைகளை எவரொருவரும் பயன்படுத்தலாம்.

நடந்தது இதுதான்: சார்லி மிகவும் கடினமாக உழைத்து, முந்தைய ஒலிம்பிக் போட்டிகளில் தடகள நிகழ்ச்சிகளைச் சிறப்பாக ஒளிபரப்பியிருந்தார். அதனால், அடுத்த ஒலிம்பிக் போட்டியில் தடகள நிகழ்ச்சிகளை ஒளிபரப்புவதில் இருந்து அவர் விலக்கப்பட்டு, நீச்சல் போட்டிகள் மற்றும் உயரத்திலிருந்து கீழே நீச்சல் குளத்திற்குள் குதிக்கும் போட்டிகள் ஆகியவற்றை ஒளிபரப்பும் வேலை அவருக்கு அளிக்கப்பட்டுள்ளதாக அவரது உயரதிகாரி அவரிடம் கூறியபோது, அவர் ஆச்சரியமும் ஏமாற்றமும் அடைந்தார்.

நீச்சல் தொடர்பான விளையாட்டுகள் பற்றி அவர் அவ்வளவாக அறிந்திராத காரணத்தால், அவர் எரிச்சலடைந்தார். தான் செய்துள்ள சிறப்பான வேலைகளுக்காக யாரும் தன்னைப் பாராட்டவில்லை என்பதுபோல் அவர் உணர்ந்தார். அதனால் கோபமுற்றார். தன் வேலையை மாற்றியது முற்றிலும் நியாயமற்றது என்று அவர் நினைத்தார். அவரது கோபம் அவர் செய்த அனைத்தையும் பாதித்தது.

அப்போதுதான் அவர் சீஸ் கதையைக் கேட்டார். அதைக் கேட்டப் பிறகு அவர் தன்னைப் பார்த்துச் சிரித்துவிட்டுத் தன் மனப்போக்கை மாற்றிக் கொண்டார். தனது உயரதிகாரி தனது ‘சீஸை’ நகர்த்தியுள்ளதை அவர் உணர்ந்தார். எனவே அவர் அந்த மாற்றத்திற்கு ஏற்றவாறு தன்னை மாற்றிக் கொண்டார். அவர் அந்த இரண்டு புதிய விளையாட்டுக்களைப்

பற்றிக் கற்றுத் தெரிந்து கொண்டார். அதோடு, புதிதான ஏதோ ஒரு விஷயத்தைச் செய்தது தன்னை இளமையாக உணரச் செய்தது என்பதையும் அவர் கண்டுகொண்டார்.

அவரது புதிய மனப்போக்கையும் ஆற்றலையும் அவரது உயரதிகாரி விரைவிலேயே புரிந்து கொண்டார். அதன் விளைவாக, விரைவில் வேறு பல மேலான வேலைகள் அவரிடம் ஒப்படைக்கப்பட்டன. முன்பைவிட அவர் இப்போது அதிக அளவில் வெற்றியை அனுபவித்தார். அதோடு, கால்பந்து விளையாட்டின் மிகச் சிறந்த ஒளிபரப்பாளர்களில் ஒருவர் என்ற பெருமையும் அவருக்கு வந்து சேர்ந்தது.

தங்கள் தொழில்முறை வாழ்க்கை முதல் தங்கள் காதல் வாழ்க்கை வரை, மக்களின் வாழ்க்கையில் இக்கதை ஏற்படுத்தியுள்ள தாக்கத்திற்கான ஓர் எடுத்துக்காட்டு மட்டுமே இது.

சீஸ் கதையின் சக்தியின்மீது எனக்கு அளவு கடந்த நம்பிக்கை உள்ளதன் காரணமாக, அந்தப் புத்தகம் சந்தைக்கு வருவதற்கு முன்பே, எங்கள் நிறுவனத்தில் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒவ்வொருவருக்கும் (இருநூறுக்கும் அதிகமானவர்கள்) நான் அதன் பிரதிகளை வரவழைத்துக் கொடுத்தேன். ஏன் தெரியுமா?

எப்படியாவது தொழிலைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தால் போதும் என்றில்லாமல், எதிர்காலத்தில் நிச்சயமாக வரவிருக்கும் கடும் போட்டியைச் சமாளிக்கும் விதத்தில் திறமையாகச் செயல்பட விரும்பும் மற்ற நிறுவனங்களைப் போலவே, கென் பிளான்சார்டு நிறுவனங்களும் தொடர்ந்து மாறிக் கொண்டே இருக்கின்றன. எங்கள் 'சீஸ்' நகர்த்தப்பட்டுக் கொண்டே இருக்கின்றது. கடந்தகாலத்தில், விசுவாசமாக இருக்கும் ஊழியர்களே எங்களுக்கு வேண்டும் என்று நாங்கள் விரும்பியிருக்கக்கூடும். இன்று, வளைந்து கொடுத்துப் போகும் மனப்போக்கைக் கொண்டிருப்பவர்களுக்கான தேவை உள்ளது.

வேலையிலும் வாழ்க்கையிலும் எல்லா நேரங்களிலும் மாற்றங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும்போது, தொடர்ந்து மாற்றங்களைச் சந்தித்துக் கொண்டிருப்பது மிகுந்த மன அழுத்தத்தை ஏற்படுத்தக்கூடும் என்பது நீங்கள் அறிந்த விஷயம்தான். இதை எதிர்கொள்வதற்குச் சிறந்த வழி, மாற்றத்தைப் புரிந்து கொள்வதற்கான புதிய கண்ணோட்டத்தை வளர்த்துக் கொள்வதுதான். இங்குதான் சீஸ் கதை முக்கியத்துவம் பெறுகிறது.

நான் இக்கதையைப் பற்றி மக்களிடம் கூறியவுடன், அப்புத்தகத்தை வாங்கிப் படித்தவர்களிடம் இருந்து எதிர்மறையான ஆற்றல்கள் வெளியேறத் துவங்கியதை என்னால் உணர முடிந்தது. எங்கள் நிறுவனத்தின் ஒவ்வொரு துறையைச் சேர்ந்த ஒவ்வொரு நபரும் இப்புத்தகத்தை நான் பரிந்துரைத்ததற்காக வலிய வந்து என்னிடம் நன்றி கூறிவிட்டு, எங்கள் நிறுவனத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த மாற்றங்களை வேறொரு புதிய கண்ணோட்டத்துடன் பார்ப்பதற்கு அது எவ்வளவு உதவிகரமாக அமைந்திருந்தது என்பதையும் என்னிடம் கூறினர். இச்சிறிய கதையைப் படிப்பதற்கு உங்களுக்கு மிகக் குறைந்த நேரமே ஆகும். ஆனால் அது உங்கள்மீது ஏற்படுத்தும் தாக்கம் பல காலம் நீடித்து நிற்கும்.

இப்புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டும்போது, நீங்கள் மூன்று பகுதிகளைக் காண்பீர்கள். 'ஒரு மறுசந்திப்புக் கூட்டம்' என்ற பகுதியில், பல வருடங்களுக்குப் பிறகு ஒன்றாகக் கூடியிருந்த முன்னாள் வகுப்புத் தோழர்கள் தங்கள் வாழ்வில் நிகழ்ந்து கொண்டிருந்த மாற்றங்களைக் கையாள முயற்சித்துக் கொண்டிருந்ததைப் பற்றிப் பேசுகின்றனர். 'என் சீஸை நகர்த்தியது யார்?: ஒரு கதை' என்ற இரண்டாவது பகுதிதான் இப்புத்தகத்தின் மையமாகும்.

இப்பகுதியில், எளிமையான இரண்டு எலிகள், மாற்றத்தைச் சிறப்பாகக் கையாள்கின்றன. ஆனால், இரண்டு குட்டி மனிதர்களின் சிக்கலான மூளையும் மனித உணர்ச்சிகளும் சேர்ந்து விஷயங்களைக் குழப்புகின்றன. எலிகள் சாமர்த்தியமானவை என்பது இதன் பொருளல்ல. எலிகளைவிட மனிதர்கள் அதிக புத்திசாலித்தனம் நிறைந்தவர்கள் என்பது நாம் அனைவரும் அறிந்த விஷயம்தான்.

இந்த நான்கு கதாபாத்திரங்களின் செயல்களை நீங்கள் கவனித்துப் பார்த்தால், இந்த எலிகளும் குட்டி மனிதர்களும் நம்முள் இருக்கும் எளிமையான அம்சங்களையும் சிக்கலான அம்சங்களையும் பிரதிநிதித்துவப்படுத்துபவர்கள் என்பதை உணரலாம். மாற்றங்கள் நிகழ்கையில், பலனளிக்கும் எளிமையான விஷயங்களைச் செய்வது நமக்கு அனுகூலமாக அமையும் என்பதை இக்கதையில் இருந்து நீங்கள் புரிந்து கொள்வீர்கள்.

'ஒரு கலந்துரையாடல்' என்ற மூன்றாவது பகுதியில், இக்கதையில் இருந்து தாங்கள் கற்றுக் கொண்ட பாடம் என்ன என்பதையும், அதைத்

தங்கள் வாழ்விலும் வேலையிலும் எவ்வாறு பயன்படுத்தப் போகிறார்கள் என்பதையும், ஒன்றுகூடிய அந்நண்பர்கள் விவாதிக்கின்றனர்.

இப்புத்தகத்தின் சில வாசகர்கள் இதன் இரண்டாம் பகுதியோடு நிறுத்திக் கொள்ள விரும்பினர். ஏனெனில், இக்கதையின் பொருளைத் தாங்களே அதிலிருந்து புரிந்து கொள்ள வேண்டும் என்று அவர்கள் விரும்பினர். மற்றவர்கள், மூன்றாவது பகுதியையும் படித்து அனுபவித்தனர். ஏனெனில், இக்கதையில் இருந்து தாங்கள் கற்றுக் கொண்ட விஷயங்களைத் தங்கள் சொந்தச் சூழ்நிலைகளுக்கு ஏற்ப எவ்வாறு நடைமுறைப்படுத்துவது என்பது பற்றியத் தங்கள் சிந்தனையை அப்பகுதி தூண்டுவதாக அவர்கள் கருதினர்.

நிகழும் அனைத்து மாற்றங்களும் நல்லதல்ல, தேவையானதுமல்ல என்பது அனைவரும் அறிந்த விஷயம்தான். ஆனால் எப்போதும் மாறிக் கொண்டிருக்கும் இவ்வுலகில், மாற்றத்திற்கு ஏற்ப நம்மை எப்படி மாற்றிக் கொள்வது என்பதைக் கற்றுக் கொண்டு, சிறந்த விஷயங்களை அனுபவிப்பது கண்டிப்பாக நமக்கு அனுகூலமாகத்தான் இருக்கும்.

எப்படிப் பார்த்தாலும், இக்கதையை நீங்கள் படிக்கும் ஒவ்வொரு முறையும், இந்தக் குட்டிக் கதையிலிருந்து ஏதேனும் புதிய, பயனுள்ள ஒரு விஷயத்தை நீங்கள் கண்டறிவீர்கள் என்பது நிச்சயம். நீங்கள் மாற்றத்தைக் கையாள்வதற்கும், வெற்றி பெறுவதற்கும் அது உங்களுக்கு உதவும்.

நீங்கள் கண்டறியும் விஷயத்தை நீங்கள் மகிழ்ச்சியாக அனுபவிப்பீர்கள் என்று நான் நம்புகிறேன். நீங்கள் எல்லா நலமும் பெற உங்களை வாழ்த்துகிறேன். சீஸோடு சேர்ந்து நீங்களும் முன்னேறிச் செல்ல வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்!

**- கென்னத் பிளான்சார்டு**

**சான்டியாகோ, கலிபோர்னியா**

## ஒரு மறுசந்திப்புக் கூட்டம்

சிக்காகோ நகரில் கோடைக்காலத்தில் ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று, பள்ளிப் பருவத்தில் நல்ல நண்பர்களாக இருந்த பல முன்னாள் மாணவர்கள், முந்தைய நாள் இரவு தங்கள் உயர்நிலைப் பள்ளியின் மறுசந்திப்புக் கூட்டத்தில் கலந்து கொண்டுவிட்டு, அடுத்த நாள் மதிய உணவிற்காக ஒன்றுகூடியிருந்தனர். ஒவ்வொருவரும் அடுத்தவரின் வாழ்வில் என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பது பற்றி மேலும் அறிந்து கொள்ள விரும்பினர். நன்றாக அரட்டையடித்துக் கொண்டு உணவருந்திய பிறகு, அவர்கள் ஒரு சுவாரசியமான உரையாடலில் ஈடுபட்டனர்.

வகுப்பில் மிகவும் பிரபலமாக இருந்த மாணவியரில் ஒருத்தியான ஏஞ்சலா, "பள்ளியில் இருந்தபோது எதிர்கால வாழ்க்கை எப்படி இருக்கும் என்று நான் நினைத்திருந்தேனோ, அதிலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக வாழ்க்கை அமைந்துள்ளது. ஏராளமான விஷயங்கள் மாறிவிட்டன," என்று கூறினாள்.

"நீ கூறுவது முற்றிலும் உண்மை," என்று நேத்தன் அவளது கருத்தை எதிரொலித்தான். அவன் தனது குடும்ப வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தான் என்பதை அனைவரும் அறிந்திருந்தனர். அவர்களுக்கு நினைவு தெரிந்த நாள் முதலாக அந்த வியாபாரம் ஒரே சீராக இயங்கி, உள்ளூர் சமூகத்தில் ஓர் அங்கமாகத் திகழ்ந்தது. எனவே, அவன் கவலைப்பட்டதுபோல் தோன்றியது மற்றவர்களுக்கு ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. அவன் தொடர்ந்து, "ஆனால், விஷயங்கள் மாறும்போது நாம் மாற விரும்புவதில்லை என்பதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

"மாற்றத்தைக் கண்டு நாம் பயப்படுவதால் அதை நாம் எதிர்க்கிறோம் என்று நான் நினைக்கிறேன்," என்றான் கார்லோஸ்.

"கார்லோஸ், நீ கால்பந்து அணித் தலைவனாகப் பொறுப்பு வகித்தவன். பயத்தைப் பற்றி நீ பேசுவாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை," என்று ஜெஸிக்கா கூறினாள்.

வீட்டில் இருந்தபடியே வேலை செய்வதில் இருந்து, நிறுவனங்களை நிர்வகிப்பதுவரை ஒவ்வொருவரும் வெவ்வேறு திசைகளில் சென்றுவிட்டிருந்தாலும், தாங்கள் அனைவரும் ஒரே மாதிரியான

உணர்வுகளைத்தான் அனுபவிக்கின்றோம் என்பதை உணர்ந்து அவர்கள் அனைவரும் சிரித்தனர்.

சமீபத்திய வருடங்களில் தங்கள் வாழ்வில் நிகழ்ந்து கொண்டிருந்த பல எதிர்பாராத மாற்றங்களைச் சமாளிப்பதற்கு ஒவ்வொருவரும் முயற்சித்துக் கொண்டிருந்தனர். ஆனால் அந்த மாற்றங்களைத் திறம்படச் சமாளிப்பதற்கான ஒரு நல்ல வழி தங்களுக்குத் தெரியவில்லை என்பதைப் பலர் ஒப்புக் கொண்டனர்.

அப்போது மைக்கேல், "மாற்றத்தைக் கண்டு நான் பயந்திருக்கிறேன். எங்கள் வியாபாரத்தில் ஒரு பெரும் மாற்றம் நிகழ்ந்தபோது, என்ன செய்வதென்று எங்களுக்குத் தெரியவில்லை. எனவே அந்த மாற்றத்திற்கு ஏற்ப நாங்கள் எங்களை மாற்றிக் கொள்ளத் தவறிவிட்டோம். அதனால் கிட்டத்தட்ட நாங்கள் எங்கள் வியாபாரத்தை இழக்கும் நிலைக்குச் சென்றுவிட்டோம்," என்று கூறினான்.

மேலும் அவன், "அப்போது ஒரு வேடிக்கையான சிறிய கதையை நான் கேள்விப்பட்டேன். அது அனைத்தையும் மாற்றியது," என்று கூறினான்.

"எப்படி மாற்றியது?" என்று நேத்தன் கேட்டான்.

"மாற்றம் குறித்து நான் கொண்டிருந்த கண்ணோட்டத்தை அக்கதை மாற்றியது. மாற்றம் என்பது ஏதோ ஒன்றை இழப்பதல்ல, மாறாக ஏதோ ஒன்றைப் பெறுவது என்பதை நான் கண்டேன். மாற்றத்தை எவ்வாறு அணுகுவது என்பதையும் அக்கதை எனக்குக் காட்டியது. அதன் பிறகு, என் வேலையிலும் வாழ்க்கையிலும் எல்லா விஷயங்களும் விரைவில் மேன்மையடைந்தன.

"முதலில் நான் இந்தக் கதை வெகு சாதாரணமாக இருந்தது கண்டு ஆச்சரியம் அடைந்தேன். ஏனெனில் பள்ளிக்கூடத்தில் நமக்குக் கூறப்பட்ட ஒரு கதைபோல அது இருந்தது.

"ஆனால் என் எரிச்சலுக்கான உண்மையான காரணம், வெளிப்படையாகத் தென்பட்ட விஷயங்களை நான் பார்க்காமல் இருந்ததும், மாற்றம் நிகழும்போது மேற்கொள்ளப்பட வேண்டிய தகுந்த நடவடிக்கைகளை எடுக்காமல் இருந்ததும்தான் என்பதை நான் உணர்ந்தேன்.

“கதையில் வரும் நான்கு கதாபாத்திரங்கள் என்னில் உள்ள பல அம்சங்களை அப்படியே பிரதிபலித்ததை நான் உணர்ந்தபோது, நான் யாரைப்போல் நடந்துகொள்ள வேண்டும் என்று தீர்மானித்து, என்னை மாற்றிக் கொண்டேன்.

“பின்னாளில் என் நிறுவனத்தில் உள்ள சிலரிடம் நான் இக்கதையைக் கூறினேன். அவர்கள் அதை வேறு சிலரிடம் கூறினர். விரைவில் எங்கள் வியாபாரம் நல்ல முறையில் வளரத் துவங்கியது. ஏனெனில் எங்களில் பெரும்பாலானவர்கள் மாற்றத்திற்கு ஏற்ப எங்களை மாற்றிக் கொண்டோம். இக்கதை தங்கள் தனிப்பட்ட வாழ்க்கையிலும் பெரிதும் உதவியதாகப் பலர் தெரிவித்தனர்.

“ஆனால் வேறு சிலர், இக்கதையிலிருந்து தங்களால் எதையும் கற்றுக் கொள்ள முடியவில்லை என்று கூறினர். இக்கதையில் கூறப்பட்டுள்ள படிப்பினைகளை அவர்கள் ஒருவேளை ஏற்கனவே அறிந்திருந்து, அவற்றைத் தங்கள் வாழ்வில் பின்பற்றி வந்திருக்கக்கூடும். அல்லது, தங்களுக்கு ஏற்கனவே எல்லாம் தெரியும் என்று நினைத்து, அவற்றைக் கற்றுக் கொள்ள விரும்பாமல் இருந்திருக்கக்கூடும். அக்கதையைப் படித்தப் பலர் ஏன் அதிலிருந்து பலனடைந்து கொண்டிருந்தனர் என்பதை அவர்களால் பார்க்க முடியவில்லை.

“எங்கள் நிறுவனத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த மாற்றத்திற்கு ஏற்பத் தன்னை மாற்றிக் கொள்ள முடியாமல் கஷ்டப்பட்ட உயர் நிர்வாக அதிகாரி ஒருவர், இக்கதை நேரத்தை வீணாக்குவதாகக் கூறியபோது, அதைக் கேட்ட மற்றவர்கள், இக்கதையில் வரும் எந்தக் கதாபாத்திரம் அவர் என்பதைத் தாங்கள் அறிந்துள்ளதாக அவரைக் கேலி செய்தனர். அதாவது, அவர் புதிதாக எதையும் கற்றுக் கொள்ளாதவர், மாற மறுப்பவர் என்று அவர்கள் கூறினர்.”

“அது என்ன கதை?” என்று ஏஞ்சலா கேட்டாள்.

“அதன் பெயர் என் சீஸை நகர்த்தியது யார்?”

குழுமியிருந்த அனைவரும் சிரித்தனர். “இக்கதை எனக்கு ஏற்கனவே பிடித்துவிட்டது என்று நான் நினைக்கிறேன். அந்தக் கதையை நீ எங்களுக்குக் கூறுவாயா? ஒருவேளை நாங்கள் அதிலிருந்து ஏதாவது ஒரு விஷயத்தைக் கற்றுக் கொள்ளக்கூடும்,” என்று கார்லோஸ் கூறினான்.

“நிச்சயமாக! நான் அக்கதையை உங்களுடன் பகிர்ந்து கொள்வதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன். இக்கதை அதிக நேரம் எடுத்துக் கொள்ளாது,” என்று கூறிவிட்டு மைக்கேல் கதையைத் துவங்கினான்:

## என் சீஸை நகர்த்தியது யார்? - ஒரு கதை

முன்பொரு சமயம், தொலைதூரத்தில் இருந்த ஓர் இடத்தில் நான்கு சிறு கதாபாத்திரங்கள் வாழ்ந்து வந்தன. அவை ஒரு புதிர்க் கட்டத்தின் ஊடாகச் சென்று, தங்களுக்குப் போஷாக்கு வழங்கித் தங்களை மகிழ்விக்கக்கூடிய 'சீஸை'த் தேடி ஓடின.

அந்த நான்கில் இரண்டு கதாபாத்திரங்கள் 'ஸ்னிஃப்' மற்றும் 'ஸ்கரி' என்ற சுண்டெலிகள். மீதி இரண்டும் குட்டி மனிதர்கள். இவர்கள் அந்தச் சுண்டெலிகளைப் போலவே சிறியவர்களாக இருந்தாலும், தோற்றத்திலும் செயலிலும் இன்றைய மக்களைப் போலவே இருந்தனர். 'ஹெம்' மற்றும் 'ஹா' என்பது அவர்களது பெயர்கள்.

அவர்கள் நால்வரின் உருவமும் சிறியதாக இருந்த காரணத்தால், அவர்களின் நடவடிக்கைகள் நமது கண்களில் இருந்து எளிதாகத் தப்பிவிடும். ஆனால் அருகில் சென்று நன்றாக உற்று நோக்கினால், மிகவும் வியப்பூட்டும் விஷயங்களை நீங்கள் கண்டறிவீர்கள்!

ஒவ்வொரு நாளும் இந்தச் சுண்டெலிகளும் குட்டி மனிதர்களும் புதிர்க் கட்டத்தில் தாங்கள் விரும்பும் சீஸைத் தேடுவதில் தங்களது நேரத்தைச் செலவிட்டனர்.

எளிய மூளையையும், சிறந்த உள்ளுணர்வுகளையும் கொண்டிருந்த ஸ்னிஃபும் ஸ்கரியும், சுண்டெலிகள் பெரும்பாலான சமயங்களில் செய்வது போலவே, நன்றாகக் கொறிப்பதற்கேற்ற உறுதியான சீஸைத் தேடின.

பல நம்பிக்கைகளாலும், உணர்ச்சிகளாலும் நிரம்பியிருந்த தங்களது சிக்கலான மூளையை உபயோகித்து, ஹெம்மும் ஹாவும் வித்தியாசமான வேறு சீஸைத் தேடினர். தாங்கள் தேடும் சீஸ் தங்களுக்கு மகிழ்ச்சியையும் வெற்றியையும் கொண்டு வரும் என்று அவர்கள் நம்பினர்.

சுண்டெலிகளும் குட்டி மனிதர்களும் எல்லா விஷயங்களிலும் வேறுபட்டிருந்தாலும், அவர்களுக்கு இடையே ஒரு பொதுவான விஷயமும் இருந்தது: ஒவ்வொரு நாள் காலையிலும், காலை ஓட்டத்தின்போது அணிந்து கொள்ளும் சிறப்பு ஆடையையும் காலணிகளையும் அவர்கள் அணிந்து கொண்டு, தங்கள் வீட்டைவிட்டுக் கிளம்பி, தங்களுக்கு மிகவும் பிடித்த சீஸைத் தேடுவதற்காகப் புதிர்க் கட்டத்திற்குள் விரைந்தனர்.

புதிர்க் கட்டத்தில் பல சிக்கலான தாழ்வாரங்களும் அறைகளும் இருந்தன. அவற்றில் சிலவற்றில் ருசியான சீஸ்கள் இருந்தன. ஆனால் அந்தப் புதிர்க் கட்டத்தில் பல இருண்ட மூலைகளும் முட்டுச் சந்துகளும்கூட இருந்தன. அவற்றில் ஒருவர் தொலைந்து போவது மிகவும் எளிது.

ஆனால், சரியான வழியைக் கண்டறிந்தவர்களுக்கு, ஒரு சிறந்த வாழ்க்கையை அனுபவிப்பதற்கான பல இரகசியங்களை அந்தப் புதிர்க் கட்டம் தன்னுள் கொண்டிருந்தது.

சீஸைக் கண்டுபிடிப்பதற்கு ஸ்னிஃபும் ஸ்கரியும் பொதுவாக எளிய சோதனை முறை ஒன்றைப் பயன்படுத்தின. அவை ஒரு தாழ்வாரத்தின் வழியாக ஓடும். அது காலியாக இருந்தால், வந்த வழியே திரும்பிச் சென்று வேறொரு தாழ்வாரத்தை நோக்கி ஓடும். பின், சீஸ் இல்லாத தாழ்வாரங்களை நினைவில் வைத்துக் கொண்டு, விரைவாக அவை புதிய பகுதிகளுக்குள் நுழையும்.

ஸ்னிஃப் தன் சிறந்த மூக்கைக் கொண்டு சீஸ் இருக்கும் திசையை மோப்பம் பிடிக்கும். ஸ்கரி விரைந்து முன்னேறிச் செல்லும். சமயங்களில் அவை தவறான திசையில் சென்று, வழி தடுமாறி, முட்டுச் சந்துகளில் சென்று சுவற்றில் மோதவும் செய்தன. ஆனால் சற்று நேரத்திற்குள் அவை தமது வழியைக் கண்டறிந்து கொள்ளும்.

ஹெம்மும் ஹாவும் தங்கள் கடந்தகால அனுபவங்கள் மூலம் தாங்கள் பெற்றிருந்த சிந்திக்கும் திறனையும் கற்கும் திறனையும் பயன்படுத்தினர். பொதுவாக அவர்கள், சீஸைக் கண்டுபிடிக்கத் தங்கள் சிக்கலான மூளையைப் பெரிதும் நம்பி இருந்தனர்.

சில சமயங்களில் அவர்கள் சிறப்பாகச் செயல்பட்டனர். ஆனால் மற்ற சமயங்களில், அவர்கள் தங்கள் சக்தி வாய்ந்த மனித நம்பிக்கைகள் மற்றும் உணர்ச்சிகளால் ஆட்கொள்ளப்பட்டு, விஷயங்களைக் குழப்பமான கண்ணோட்டத்தில் அணுகினர். இதன் காரணமாக, புதிர்க் கட்டத்தில் அவர்களது வாழ்க்கை அதிக சிக்கலானதாகவும், சவாலானதாகவும் அமைந்தது.

எது எப்படி இருந்தாலும், ஸ்னிஃப், ஸ்கரி, ஹெம், மற்றும் ஹா ஆகிய நால்வரும் தாங்கள் தேடிக் கொண்டிருந்ததைத் தங்கள் சொந்த வழியில் கண்டறிந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும், 'ஸீ' சீஸ் நிலையத்தில்

இருந்த ஒரு தாழ்வாரத்தின் முடிவில் தங்களுக்கு விருப்பமான சீஸைக் கண்டுபிடித்தனர்.

அதன் பிறகு ஒவ்வொரு நாள் காலையிலும், அந்தச் சுண்டெலிகளும் குட்டி மனிதர்களும், ஓடும்போது அணியும் உடைகளையும் காலணிகளையும் அணிந்து கொண்டு, வீட்டைவிட்டுக் கிளம்பி 'ஸீ' சீஸ் நிலையத்தை நோக்கி ஓடத் துவங்கினர். விரைவில், அவர்கள் ஒவ்வொருவரும் தங்களுக்கென்று பிரத்யேகமான ஒரு வழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டனர்.

ஸ்னிஃபும் ஸ்கரியும் தினமும் சீக்கிரமாக எழுந்து, புதிர்க் கட்டத்தின் ஊடாக விரைந்து, எப்போதும் ஒரே வழியைப் பின்தொடர்ந்து சென்றன.

தாம் வந்து சேர வேண்டிய இடத்தை அடைந்தவுடன், அவை தம் காலணிகளைக் கழற்றி, அவற்றை ஒன்றாக இணைத்துக் கட்டி, தேவையான நேரத்தில் விரைவாக எடுப்பதற்கு ஏதுவாக, அவற்றைத் தமது கழுத்தைச் சுற்றித் தொங்கவிட்டுக் கொண்டன. பிறகு அவை தமக்கு விருப்பமான சீஸை மகிழ்ச்சியாக உண்ணத் துவங்கின.

துவக்கத்தில் ஹெம்மும் ஹாவும்கூட ஒவ்வொரு நாள் காலையிலும் தங்களுக்காகக் காத்துக் கொண்டிருந்த ருசியான சீஸிற்காக 'ஸீ' சீஸ் நிலையத்திற்கு விரைந்து கொண்டுதான் இருந்தனர்.

ஆனால் சிறிது காலத்திற்குப் பிறகு, அந்தக் குட்டி மனிதர்கள் வேறொரு வழக்கத்தை உருவாக்கிக் கொண்டனர். அவர்கள் இருவரும் காலையில் சற்று மெதுவாக எழுந்து, மெதுவாக உடையணிந்து, 'ஸீ' சீஸ் நிலையத்திற்கு நடந்து சென்றனர். ஏனெனில், சீஸ் எங்கே இருக்கிறது என்பதும், அங்கு எவ்வாறு சென்றடைய வேண்டும் என்பதும் அவர்களுக்குத்தான் இப்போது தெரியுமே!

சீஸ் எங்கிருந்து அந்த இடத்திற்கு வந்தது, யார் அதை அங்கு வைத்தது என்பது பற்றி அவர்களுக்கு எதுவும் தெரிந்திருக்கவில்லை. ஆனால் அங்கு சீஸ் நிச்சயமாக இருக்கும் என்று அவர்கள் வெறுமனே அனுமானித்தனர்.

ஒவ்வொரு நாள் காலையிலும் ஹெம்மும் ஹாவும் சீஸ் நிலையத்தை வந்தடைந்தவுடன், தங்களை நன்றாக ஆசுவாசப்படுத்திக் கொண்டனர். தாங்கள் ஓடும்போது அணிந்திருந்த ஆடையைக் கழற்றித் தொங்கவிட்டனர். ஓடுவதற்கான காலணிகளைக் கழற்றி ஓரமாக

வைத்துவிட்டு, செருப்புகளை அணிந்து கொண்டனர். சீஸைக் கண்டுபிடித்துவிட்டதால் அவர்கள் இப்போது மிகவும் சௌகரியமாக உணரத் தலைப்பட்டனர்.

"பிரமாதம்! நம் வாழ்நாள் முழுவதற்கும் தேவையான சீஸ் இங்கு நிறைந்துள்ளது," என்று ஹெம் கூறினான். அந்தக் குட்டி மனிதர்கள் இருவரும் மகிழ்ச்சியாகவும் வெற்றிகரமாகவும் உணர்ந்தனர். தாங்கள் இப்போது பாதுகாப்பாக இருப்பதாக அவர்கள் நினைத்தனர்.

விரைவில், 'ஸீ' சீஸ் நிலையத்தில் இருந்த சீஸ் தங்களுக்குச் சொந்தமானது என்று அவர்கள் இருவரும் கருதினர். அங்கு ஏராளமான சீஸ் இருந்ததால், அதற்கு அருகில் இருக்கும் நோக்கத்தில், இறுதியில் அவர்கள் தங்கள் வீடுகளை இடம் மாற்றி, அதைச் சுற்றித் தங்களுக்கென்று ஒரு சமூக வாழ்க்கையையும் அமைத்துக் கொண்டனர்.

தங்கள் சொந்த வீட்டில் இருப்பதுபோல் உணர்வதற்காக, ஹெம்மும் ஹாவும் அந்த சீஸ் நிலையத்தின் சுவர்களைச் சீஸ் பற்றிய மேற்கோள்களால் அலங்கரித்தனர். தங்களைச் சுற்றிலும் சீஸ் பற்றியப் படங்களையும் வரைந்தனர். அதில் ஒரு மேற்கோள் இவ்வாறு அமைந்திருந்தது:




சில சமயங்களில், ‘ஸீ’ சீஸ் நிலையத்தில் இருந்த தங்கள் சீஸ் குவியலைக் காட்டுவதற்காக ஹெம்மும் ஹாவும் தங்கள் நண்பர்களை அங்கு அழைத்து வந்து, பெருமிதத்துடன் அதைச் சுட்டிக்காட்டி, “இந்த சீஸ் மிகவும் அழகாக இருக்கிறது அல்லவா?” என்று கேட்டனர். சில

சமயங்களில் அந்த சீஸை அவர்கள் தங்கள் நண்பர்களுடன் பகிர்ந்து கொண்டனர். சில சமயங்களில் அவர்கள் அவ்வாறு செய்யவில்லை.

“இந்த சீஸ் நமக்குச் சொந்தமானதுதான். இதைக் கண்டுபிடிப்பதற்கு நாம் நிச்சயமாக நீண்டகாலம் கடினமாக உழைத்திருக்கிறோம்,” என்று கூறியவாறே, அந்த சீஸ் குவியலில் இருந்து ஒரு புதிய சீஸ் துண்டை எடுத்து ஹெம் தன் வாயில் போட்டான்.

அதன் பிறகு, அவன் அடிக்கடி செய்வதுபோல் நன்றாகத் தூங்கினான்.

ஒவ்வோர் இரவும் அந்தக் குட்டி மனிதர்கள், கை நிறைய சீஸுடன் தங்கள் வீட்டிற்குச் சென்றுவிட்டு, இன்னும் அதிக சீஸ் வேண்டி மறுநாள் காலையில் நம்பிக்கையுடன் அந்த சீஸ் நிலையத்திற்கு வந்தனர்.

சிறிது காலம் இப்படியே சென்று கொண்டிருந்தது.

ஒரு சமயத்தில், ஹெம் மற்றும் ஹாவின் நம்பிக்கை, வெற்றியின் அகங்காரமாக உருவெடுத்தது. விரைவில் அகங்கார போதை அவர்களுடைய தலைக்கேறியதில், தங்களைச் சுற்றி என்ன நடந்து கொண்டிருந்தது என்பதைக் கவனிக்க அவர்கள் தவறிவிட்டனர்.

காலம் செல்லச் செல்ல, ஸ்னிஃபும் ஸ்கரியும் தங்கள் வழக்கத்தைத் தொடர்ந்து கடைபிடித்துக் கொண்டிருந்தன. ஒவ்வொரு காலையிலும் அவை ‘ஸீ’ சீஸ் நிலையத்தைச் சுற்றி மோப்பம் பிடித்து, துரிதமாகச் செயல்பட்டு, முந்தைய நாளிலிருந்து இன்று ஏதேனும் மாற்றம் நிகழ்ந்துள்ளதா என்று பார்ப்பதற்காக அந்தப் பகுதியை ஆய்வு செய்தன. பிறகு, ஆர அமர உட்கார்ந்து சீஸைக் கொறித்தன.

ஒருநாள் காலையில் அவை ‘ஸீ’ சீஸ் நிலையத்தை வந்தடைந்தபோது, அங்கு சீஸ் இல்லாததைக் கண்டன.

ஆனால் அந்தச் சுண்டெலிகள் அது குறித்து ஆச்சரியப்படவில்லை. அங்கிருந்த சீஸின் அளவு ஒவ்வொரு நாளும் குறைந்து வருவதை ஸ்னிஃபும் ஸ்கரியும் கவனித்து வந்திருந்ததால், தவிர்க்க முடியாத சூழ்நிலைக்கு அவை தம்மைத் தயார்படுத்தி இருந்ததோடு, அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பதையும் அவை உள்ளுணர்வுரீதியாகத் தெரிந்து வைத்திருந்தன.

அவை ஒன்றையொன்று பார்த்தன. தம் கழுத்தைச் சுற்றிக் கட்டித் தொங்கவிட்டிருந்த, ஓடுவதற்கான காலணிகளைத் தம் கழுத்திலிருந்து

எடுத்துத் தம் கால்களில் அணிந்து, அவற்றைக் கட்டத் துவங்கின.

விஷயங்களை அச்சுண்டெலிகள் அளவுக்கதிகமாக ஆய்வு செய்யவில்லை.

அவற்றைப் பொறுத்தவரையில், பிரச்சனையோ அல்லது அதற்கான விடையோ சிக்கலாகத் தெரியவில்லை. 'ஸீ' சீஸ் நிலையத்தின் சூழ்நிலை மாறியிருந்தது. எனவே, ஸ்னிஃப்பும் ஸ்கரியும் மாறுவதென்று தீர்மானித்தன.

அவை இரண்டும் அந்தப் புதிர்க் கட்டத்திற்குள் உற்று நோக்கின. அப்போது ஸ்னிஃப் தன் மூக்கை உயர்த்தி மோப்பம் பிடித்து, ஸ்கரியைப் பார்த்துத் தலையசைத்தது. அதைக் கண்டவுடன், ஸ்கரி வேகமாக அந்தப் புதிர்க் கட்டத்திற்குள் ஓட்டமெடுத்தது. ஸ்னிஃப் தன்னால் இயன்ற வேகத்தில் ஸ்கரியைப் பின்தொடர்ந்தது.

புதிய சீஸைக் கண்டுபிடிப்பதற்காக அவை இரண்டும் வேகமாக ஓடிக் கொண்டிருந்தன.

அதே நாளில் சிறிது நேரம் கழித்து, ஹெம்மும் ஹாவும் 'ஸீ' சீஸ் நிலையத்திற்கு வந்தனர். ஒவ்வொரு நாளும் அங்கு நிகழ்ந்து கொண்டிருந்த சிறிய மாற்றங்களை அவர்கள் கவனித்திருக்கவில்லை என்பதால், வழக்கம் போலவே தங்களுக்குரிய சீஸ் அங்கு இருக்கும் என்று அவர்கள் தெம்பாக இருந்தனர்.

அங்கு அவர்கள் கண்ட காட்சி அவர்களை நிலைகுலைய வைத்தது.

"என்ன! சீஸ் இல்லையா?" என்று ஹெம் கத்தினான். சத்தமாகக் கத்தினால் யாரேனும் ஒருவர் சீஸை அங்கு கொண்டு வந்து வைத்துவிடுவார்கள் என்பதுபோல், "சீஸ் இல்லையா? சீஸ் இல்லையா?" என்று அவன் தொடர்ந்து கத்திக் கொண்டே இருந்தான்.

"யார் என்னுடைய சீஸை இங்கிருந்து நகர்த்தியது?" என்று அவன் மீண்டும் கத்தினான்.

இறுதியில், தன் கைகளை இடுப்பில் வைத்துக் கொண்டு, முகம் சிவந்தவனாக, "இது அநியாயம்!" என்று தொண்டை கிழியக் கத்தினான்.

தன் கண்களை நம்ப முடியாமல் ஹாவும் தலையசைத்தான். 'ஸீ' சீஸ் நிலையத்தில் சீஸ் இருக்கும் என்று அவனும் எதிர்பார்த்திருந்தான்.

அதிர்ச்சியில் உறைந்துபோய் அவன் அங்கு நெடுநேரம் நின்றான். அவன் இதற்குத் தன்னைத் தயார்படுத்திக் கொண்டிருக்கவில்லை.

ஹெம் ஏதோ கத்திக் கொண்டிருந்தான். ஆனால் ஹாவிற்கு அதைக் கேட்க விருப்பமில்லை. தான் எதிர்கொண்டிருந்த பிரச்சனையைக் கையாள அவன் விரும்பவில்லை. அதனால் அவன் எதையும் செவிமடுக்காதவன்போல் இருந்தான்.

இந்தக் குட்டி மனிதர்களின் நடத்தை ஆக்கபூர்வமானதாக இருக்கவில்லை. ஆனால் அவர்கள் ஏன் அவ்வாறு நடந்து கொண்டார்கள் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

சீஸைக் கண்டுபிடித்தது சுலபமான செயலாக இருக்கவில்லை. அந்தக் குட்டி மனிதர்களைப் பொறுத்தவரை, அதற்கு ஆழமான ஓர் அர்த்தமும் இருந்தது.

தாங்கள் மகிழ்ச்சியாக இருப்பதற்கு எது தேவை என்று அவர்கள் நினைத்தார்களோ, சீஸைக் கண்டுபிடித்ததன் மூலம் அது அவர்களுக்குக் கிடைத்தது. அவர்களுடைய ருசியைப் பொறுத்து, சீஸ் எதை உணர்த்துகிறது என்பது குறித்து அவர்கள் தங்களுக்கென்று பிரத்யேகமான கண்ணோட்டத்தைக் கொண்டிருந்தார்கள்.

சீஸைக் கண்டுபிடிப்பது என்பது சிலருக்கு வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களைப் பெறுவது ஆகும். வேறு சிலருக்கு, நல்ல ஆரோக்கியத்தை அனுபவிப்பது ஆகும். இன்னும் ஒருசிலருக்கு ஆன்மீகரீதியாகச் சிறப்புற்று இருப்பதாகும்.

ஹாவைப் பொறுத்தவரை, சீஸ் என்பது பாதுகாப்பான உணர்வைக் கொண்டிருத்தல், என்றேனும் ஒருநாள் நல்ல அன்பான ஒரு குடும்பத்தை அமைத்துக் கொள்ளுதல், மற்றும் 'செடார்' சந்தில் ஒரு சொகுசான வீட்டில் வாழ்தல் ஆகியவையாகும்.

ஹெம்மிற்கு, மற்றவர்கள்மீது அதிகாரம் செலுத்தும் ஒரு பெரிய அதிகாரியாக உருவாகி, 'கேமெம்பர்ட்' குன்றுப் பகுதியில் ஒரு பெரிய வீட்டிற்குச் சொந்தக்காரர் ஆவதாகும்.

ஹெம்மிற்கும் ஹாவிற்கும் சீஸ் முக்கியமான விஷயமாக இருந்ததால், என்ன செய்ய வேண்டும் என்று தீர்மானிப்பதற்கு அவர்கள் இருவரும் நீண்ட நேரத்தைச் செலவிட்டனர். மீண்டும் மீண்டும் அந்த சீஸ் நிலையத்தைச் சுற்றி வந்து, சீஸ் உண்மையிலேயே அங்கிருந்து

போய்விட்டதா என்பதை உறுதி செய்து கொள்ளும் யோசனை மட்டும்தான் அவர்களுக்கு உதித்தது.

ஸ்னிஃபும் ஸ்கரியும் அங்கிருந்து விரைவில் நகர்ந்து சென்றுவிட்டன. ஆனால் ஹெம்மும் ஹாவும் தொடர்ந்து அங்கேயே உழன்று கொண்டு, தலையைப் பிய்த்துக் கொண்டிருந்தனர்.

தங்களுக்கு ஏற்பட்ட அநியாயம் குறித்து அவர்கள் கோபப்பட்டுப் புலம்பினர். ஹா மனமுடைந்து போனான். நாளைக்கும் இங்கு சீஸ் இல்லாமல் போனால் என்ன செய்வது? இந்த சீஸை மனத்தில் வைத்து அவன் எதிர்காலத் திட்டங்களை வகுத்திருந்தான்.

குட்டி மனிதர்களால் அதை நம்ப முடியவில்லை. இது எப்படி நிகழ்ந்திருக்க முடியும்? யாரும் அவர்களை எச்சரித்திருக்கவில்லை. இது நிச்சயமாகச் சரியல்ல. விஷயங்களின் போக்கு இப்படி அமைந்திருக்கக்கூடாது.

அன்றிரவு ஹெம்மும் ஹாவும் பசியோடும், கவலையோடும் தங்கள் வீடுகளை நோக்கிச் சென்றனர். ஆனால் அங்கிருந்து புறப்படுவதற்கு முன், அங்கிருந்த சுவரில் ஹா இவ்வாறு எழுதினான்:




அடுத்த நாள் ஹெம்மும் ஹாவும் தங்கள் வீடுகளைவிட்டுக் கிளம்பி, மீண்டும் 'ஸீ' சீஸ் நிலையத்திற்குத் திரும்பினர். தங்கள் சீஸ் எப்படியாவது அங்கு இருக்கும் என்று அவர்கள் இன்னும் எதிர்பார்த்தனர்.

ஆனால் சூழ்நிலையில் எந்த மாற்றமும் ஏற்பட்டிருக்கவில்லை. அந்த இடத்தில் சீஸ் இருக்கவில்லை. என்ன செய்ய வேண்டும் என்பது குட்டி மனிதர்களுக்குத் தெரியவில்லை. ஹெம்மும் ஹாவும் இரு சிலைகளைப்போல் அசையாமல் அங்கு நின்றனர்.

ஹா தன்னால் முடிந்தவரை தன் கண்களை இறுக்கமாக மூடிக் கொண்டு, தன் கைகளால் காதுகளையும் பொத்திக் கொண்டான். எந்தக் காட்சியும், எந்த ஒலியும் தன்னை நெருங்கக்கூடாது என்று அவன் நினைத்தான். சீஸின் அளவு மெல்ல மெல்லக் குறைந்து கொண்டிருந்தது என்ற விஷயத்தை அவன் ஒப்புக் கொள்ள விரும்பவில்லை. மாறாக, திடீரென்று அங்கிருந்து அந்த சீஸ் நகர்த்தப்பட்டதாக அவன் நம்பினான்.

ஹெம் அந்தச் சூழ்நிலையை மீண்டும் மீண்டும் ஆய்வு செய்து பார்த்தான். இறுதியில், பெரும் நம்பிக்கைகளைக் கொண்டிருந்த அவனது சிக்கலான மூளை அவனைப் பிடித்து நிறுத்தியது. "எனக்கு ஏன் இப்படி ஏற்பட்டது? இங்கு உண்மையிலேயே என்ன நடந்து கொண்டிருக்கிறது?" என்று அதிகாரமாக அவன் கேட்டான்.

இறுதியில், ஹா தன் கண்களைத் திறந்து, சுற்றுமுற்றும் பார்த்து, "அது இருக்கட்டும். ஸ்னிஃபும் ஸ்கரியும் எங்கே? நமக்குத் தெரியாத ஏதோ ஒன்றை அவை அறிந்திருந்திருக்கும் என்று நீ நினைக்கிறாயா?" என்று கேட்டான்.

அதற்கு ஹெம் ஏளனமாக, "அவற்றுக்கு என்ன தெரிந்திருக்கும்? அவை வெறும் சுண்டெலிகள். ஒரு சூழ்நிலைக்கு ஏற்ப அவை வெறுமனே செயல்படுகின்றன. நாம் குட்டி மனிதர்கள். சுண்டெலிகளைவிட சாமர்த்தியசாலிகள். நம்மால் இப்பிரச்சனைக்கான விடையை நிச்சயமாகக் கண்டுபிடிக்க முடியும்," என்று கூறினான்.

"நாம் சாமர்த்தியசாலிகள் என்று எனக்குத் தெரியும். ஆனால் இக்கணத்தில் நாம் சாமர்த்தியமாக நடந்து கொள்வதாக எனக்குத் தோன்றவில்லை. ஹெம், விஷயங்கள் இங்கு மாறிக் கொண்டிருக்கின்றன. அவற்றிற்கு ஏற்ப நாம் மாறி, விஷயங்களை வித்தியாசமாகச் செய்ய வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது," என்று ஹா கூறினான்.

"நாம் ஏன் மாற வேண்டும்? நாம் குட்டி மனிதர்கள். சிறப்பு வாய்ந்தவர்கள். இப்படிப்பட்ட ஒரு நிலை நமக்கு ஏற்பட்டிருக்கக்கூடாது.

அப்படியே ஏற்பட்டிருந்தாலும், குறைந்தபட்சம் நமக்குச் சில ஆதாயங்களாவது கிடைக்க வேண்டும்," என்று ஹெம் பதிலளித்தான்.

"நமக்கு ஏன் ஆதாயங்கள் கிடைக்க வேண்டும்?" என்று ஹா கேட்டான்.

"ஏனெனில் அதற்கு நமக்கு உரிமை உண்டு," என்று ஹெம் தெரிவித்தான்.

"எந்த மாதிரியான உரிமை?" ஹா தெரிந்து கொள்ள விரும்பினான்.

"சீஸ் நமக்கு உரிமையானது."

"ஏன்?" என்று ஹா கேட்டான்.

"ஏனெனில் இப்பிரச்சனையை நாம் தோற்றுவிக்கவில்லை. வேறு யாரோ இதைச் செய்திருக்க வேண்டும். எனவே நமக்கு இதிலிருந்து ஏதேனும் ஓர் ஆதாயம் நிச்சயமாகக் கிடைக்க வேண்டும்," என்று ஹெம் கூறினான்.

"இச்சூழ்நிலையை நாம் இதற்கு மேலும் ஆய்வு செய்வதை நிறுத்திவிட்டு, வேறு புதிய சீஸைத் தேட வேண்டும் என்று நான் நினைக்கிறேன்," என்று ஹா பரிந்துரைத்தான்.

"இல்லையில்லை, நான் இப்பிரச்சனையின் ஆழம்வரை சென்று பார்க்கப் போகிறேன்," என்று ஹெம் விவாதித்தான்.

அடுத்து என்ன நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று ஹெம்மும் ஹாவும் தீர்மானிக்க முயற்சித்துக் கொண்டிருந்தபோது, ஸ்னிஃபும் ஸ்கரியும் ஏற்கனவே செயலில் இறங்கிவிட்டிருந்தன. அவை புதிர்க் கட்டத்திற்குள் மேலும் வெகுதூரம் சென்று, தாழ்வாரங்களில் மேலும் கீழும் சுற்றித் திரிந்து, தாம் கண்ட ஒவ்வொரு சீஸ் நிலையத்திலும் சீஸ் இருக்கிறதா என்று பார்த்தன.

புதிய சீஸைக் கண்டுபிடிப்பது தவிர அவை வேறு எதைப் பற்றியும் சிந்திக்கவில்லை.

சிறிது காலம் அவற்றால் சீஸைக் கண்டுபிடிக்க முடியவில்லை. இறுதியில், அவை அதற்கு முன் சென்றிராத ஏதோ ஓர் இடத்திற்குள் நுழைந்தன. அதுதான் சீஸ் நிலையம் 'என்.'

மகிழ்ச்சியில் அவை கீச்சிட்டன. அவை தேடிக் கொண்டிருந்தது அவற்றிற்குக் கிடைத்தது. அது முந்தைய சீஸைவிட அதிக சுவை மிகுந்த

ஒரு புதிய சீஸ்.

அவற்றால் தம் கண்களையே நம்ப முடியவில்லை. இவ்வளவு பிரம்மாண்டமான அளவில் சீஸை அவை அதற்கு முன் பார்த்திருக்கவில்லை.

இதற்கிடையில், ஹெம்மும் ஹாவும் 'ஸீ' சீஸ் நிலையத்தில் தங்கள் சூழ்நிலையை இன்னும் மதிப்பீடு செய்து கொண்டிருந்தனர். சீஸ் இல்லாததன் விளைவுகளால் அவர்கள் இப்போது அல்லலுற்றுக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு எரிச்சலும் கோபமும் ஏற்பட்டது. தாங்கள் சிக்கியிருந்த சூழ்நிலைக்கு அவர்கள் ஒருவரை ஒருவர் குறைகூறிக் கொண்டிருந்தனர்.

தனது சுண்டெலி நண்பர்களான ஸ்னிஃப்பையும் ஸ்கரியையும் பற்றி ஹா அவ்வப்போது நினைத்துப் பார்த்து, அவை ஏதேனும் புதிய சீஸைக் கண்டுபிடித்திருக்குமோ என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டான். புதிர்க் கட்டத்திற்குள் வளைய வருவதில் ஓர் உறுதியற்ற நிலை இருந்ததால், புதிய சீஸைக் கண்டுபிடிப்பதில் அச்சுண்டெலிகள் நிச்சயமாகச் சிரமத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கக்கூடும் என்று அவன் நம்பினான். அதே சமயம், அந்நிலை சில காலம் மட்டுமே நிலைத்திருக்கும் என்பதையும் அவன் அறிந்திருந்தான்.

சில சமயங்களில், ஸ்னிஃப்பும் ஸ்கரியும் புதிய சீஸைக் கண்டுபிடித்து, அதை மகிழ்ச்சியாகச் சாப்பிட்டுக் கொண்டிருப்பதாக ஹா கற்பனை செய்தான். தானும் புதிர்க் கட்டத்திற்குள் வளைய வந்து, புதிய சீஸைக் கண்டுபிடித்தால் எவ்வளவு நன்றாக இருக்கும் என்று அவன் நினைத்தான். கற்பனையில் புதிய சீஸை அவனால் ருசித்துப் பார்க்கக்கூட முடிந்தது.

புதிய சீஸைக் கண்டுபிடித்து மகிழ்ச்சியாக உட்கொள்வதாக அவன் எவ்வளவு தெளிவாகக் கற்பனை செய்து பார்த்தானோ, அந்த அளவு விரைவாக 'ஸீ' சீஸ் நிலையத்தைவிட்டுத் தான் வெளியேறுவதை அவன் கண்டான்.

திடீரென்று, "வா, நாம் போகலாம்!" என்று அவன் கூக்குரலிட்டான்.

அதற்கு ஹெம் உடனடியாக, "இல்லை, இந்த இடம் எனக்குப் பிடித்திருக்கிறது. இது வசதியாக இருக்கிறது. இதுதான் எனக்குத் தெரிந்த இடம். அதோடு, வெளியே ஆபத்து காத்திருக்கலாம்," என்று பதிலளித்தான்.

“அப்படியொன்றும் இருக்காது. இந்தப் புதிர்க் கட்டத்தின் பிற பகுதிகளின் ஊடாக முன்பு நாம் ஓடியிருக்கிறோம். மீண்டும் நம்மால் அவ்வாறு செய்ய முடியும்,” என்று ஹா வாதிட்டான்.

“அதற்கு எனக்கு மிகவும் வயதாகிவிட்டது. புதிர்க் கட்டத்தில் தொலைந்து போய், ஒரு முட்டாளாக நிற்பதில் எனக்கு விருப்பமில்லை. நீ அதை விரும்புகிறாயா?” என்று ஹெம் கேட்டான்.

அதைக் கேட்டவுடன், தோல்வி குறித்த பயம் மீண்டும் ஹாவிடம் திரும்பியது. புதிய சீஸைக் கண்டுபிடிப்பதற்கான நம்பிக்கை அவனிடமிருந்து மெல்ல மெல்ல மறைந்தது.

அதனால் ஒவ்வொரு நாளும் அந்தக் குட்டி மனிதர்கள், முன்பு தாங்கள் என்ன செய்தார்களோ, அதையே தொடர்ந்து செய்தனர். அவர்கள் ‘ஸீ’ சீஸ் நிலையத்திற்குச் சென்றனர்; அங்கு சீஸ் இல்லாததைக் கண்டனர்; பிறகு தங்கள் கவலைகளையும் எரிச்சல்களையும் தங்களோடு சுமந்து கொண்டு தத்தம் வீடுகளுக்குத் திரும்பினர்.

அங்கு நிகழ்ந்து கொண்டிருந்தவற்றை அவர்கள் மறுக்க முயற்சித்தனர். நாளுக்கு நாள் அவர்களது ஆற்றல் குறைந்து, எரிச்சல் அதிகரித்தது. அவர்களது வீடுகளும் முன்புபோல் உற்சாகமளிப்பவையாக இருக்கவில்லை. தூங்குவதற்கு அவர்கள் மிகவும் சிரமப்பட்டனர். எந்த சீஸையும் கண்டுபிடிக்க முடியாதது குறித்து அவர்களுக்கு இரவில் மோசமான கனவுகள் வந்தன.

ஆனால் ஒவ்வொரு நாளும் ஹெம்மும் ஹாவும், அந்த ‘ஸீ’ சீஸ் நிலையத்திற்கே மீண்டும் வந்து காத்திருந்தனர்.

“நாம் இன்னும் சற்றுக் கடினமாக வேலை செய்தால், உண்மையில் எதுவும் அவ்வளவாக மாறியிருக்கவில்லை என்பதைக் கண்டுகொள்வோம். சீஸ் இங்குதான் எங்கோ அருகில் இருக்கிறது. ஒருவேளை அவர்கள் அதை அந்தச் சுவரின் பின்னால் ஒளித்து வைத்திருக்கக்கூடும்,” என்று ஹெம் கூறினான்.

அடுத்த நாள், ஹெம்மும் ஹாவும் உளியையும் சுத்தியலையும் தங்களோடு கொண்டு வந்தனர். ஹெம் உளியைச் சுவரின்மீது தாங்கிப் பிடித்தான். ஹா சுத்தியலை எடுத்து அதில் ஓங்கி அறைந்தான். ‘ஸீ’ சீஸ் நிலையத்தின் சுவரில் ஒரு துளையிடும்வரை ஹா மீண்டும் மீண்டும் சுத்தியலால் அடித்தான். பிறகு அந்தத் துளையின் வழியாக அவர்கள்

இருவரும் உற்றுப் பார்த்தனர். ஆனால் அங்கு சீஸ் எதுவும் இருக்கவில்லை.

அவர்கள் ஏமாற்றம் அடைந்தனர். ஆனால் தங்களால் இப்பிரச்சனையைச் சமாளிக்க முடியும் என்று அவர்கள் நம்பினர். எனவே அவர்கள், காலையில் முன்னதாகவே கிளம்பி, மாலையில் நெடுநேரம்வரை 'ஸீ' சீஸ் நிலையத்தில் கடினமாக வேலை பார்த்தனர். ஆனால் சில நாட்களுக்குப் பின் அவர்கள் செய்திருந்ததெல்லாம், சுவரில் ஒரு பெரிய துளையிட்டிருந்ததுதான்.

வெற்று நடவடிக்கைக்கும் ஆக்கபூர்வமான நடவடிக்கைக்கும் இடையே உள்ள வேறுபாட்டை ஹா உணரத் துவங்கினான்.

"எனக்கென்னவோ நாம் வெறுமனே இங்கு உட்கார்ந்து, அடுத்து என்ன நிகழப் போகிறது என்று பொறுத்திருந்து பார்க்க வேண்டும் என்று தோன்றுகிறது. இப்போது இல்லாவிட்டாலும் எப்போதாவது அவர்கள் அந்த சீஸை மீண்டும் இங்கு கொண்டுவந்து வைத்தாகத்தானே வேண்டும்," என்று ஹெம் கூறினான்.

ஹா அதை நம்ப விரும்பினான். எனவே ஒவ்வொரு நாளும் வீட்டிற்குச் சென்று ஓய்வெடுத்துவிட்டு, ஹெம்முடன் வேண்டா வெறுப்பாக 'ஸீ' சீஸ் நிலையத்திற்குத் திரும்பினான். ஆனால் சீஸ் மட்டும் அங்கு மீண்டும் தலைகாட்டவேயில்லை.

இதற்கிடையில், பசியாலும் மன அழுத்தத்தாலும் குட்டி மனிதர்கள் பலவீனமடைந்து கொண்டிருந்தனர். தங்கள் நிலைமை மேம்படுவதற்காக வெறுமனே காத்திருந்து, ஹா சோர்ந்து போனான். சீஸ் இல்லாத சூழ்நிலையில் தொடர்ந்து அதிக காலம் தங்கினால், நிலைமை இன்னும் மோசமாகும் என்பது அவனுக்கு உறைக்கத் துவங்கியது.

தாங்கள் தோற்றுக் கொண்டிருக்கிறோம் என்பதை ஹா அறிந்தான்.

இறுதியில் ஒருநாள், ஹா தன்னைப் பார்த்துச் சிரிக்கத் துவங்கினான். "ஹா, நம்மைப் பார். நாம் ஒரே விஷயத்தைத் திரும்பத் திரும்பச் செய்துவிட்டு, ஏன் நிலைமை மேம்படவில்லை என்று வியந்து கொண்டிருக்கிறோம். இது நகைப்பிற்கு இடமளிக்கும் செயலல்லவா?"

புதிர்க் கட்டத்தின் ஊடாக மீண்டும் ஓடுவது குறித்த யோசனையை ஹா விரும்பவில்லை. ஏனெனில், தான் வழி தெரியாது தவிப்போம் என்றும்,

சீஸை எங்கு தேடுவது என்பது குறித்துத் தனக்கு எந்த யோசனையும் இல்லை என்றும் அவன் அறிந்திருந்தான். ஆனால் தான் கொண்டிருந்த பயம் தனக்கு ஏற்படுத்திக் கொண்டிருந்த சேதத்தை அவன் கண்டவுடன், தன் தவறை நினைத்து அவனால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

அவன் ஹெம்மைப் பார்த்து, "ஓடுவதற்கான நமது காலணிகளை நாம் எங்கே வைத்தோம்?" என்று கேட்டான். முன்பு 'ஸீ' சீஸ் நிலையத்தில் தங்கள் சீஸைக் கண்டவுடன், இனி அக்காலணிகள் தங்களுக்குத் தேவைப்படாது என்று நினைத்து, அவற்றை எங்கோ தூக்கிப் போட்டுவிட்டிருந்தனர்.

ஓடுவதற்கான தன் காலணிகளைத் தேடிக் கண்டுபிடித்து அணிந்து தனது நண்பன் தயாராவதைக் கண்ட ஹெம், "நீ அந்தப் புதிர்க் கட்டத்திற்குள் உண்மையிலேயே மீண்டும் செல்லப் போகிறாயா? சீஸை அவர்களாகவே மீண்டும் கொண்டு வந்து இங்கு வைக்கும்வரை நீ ஏன் என்னுடன் இங்கு காத்திருக்கக்கூடாது?" என்று கேட்டான்.

"ஹெம், நீ ஒரு விஷயத்தைப் புரிந்து கொள்ள மறுக்கிறாய். நானும் அப்படித்தான் இருந்தேன். ஆனால் நேற்றைய சீஸை அவர்கள் ஒருபோதும் மீண்டும் இங்கு கொண்டுவந்து வைக்கப் போவதில்லை என்பதை நான் இப்போது உணர்கிறேன். புதிய சீஸைக் கண்டுபிடிப்பதற்கான வேளை வந்துவிட்டது," என்று ஹா கூறினான்.

"ஆனால் வெளியேயும் சீஸ் இல்லை என்றால் என்ன செய்வது? ஒருவேளை அங்கு இருந்தாலும், அதை நீ கண்டுபிடிக்காவிட்டால் என்ன செய்வாய்?" என்று ஹெம் வாதிட்டான்.

"அது எனக்குத் தெரியாது," என்று ஹா பதிலளித்தான். அதே கேள்விகளை அவன் தனக்குத் தானே இதுவரை பல முறை கேட்டுக் கொண்டிருந்ததில், அவனது பயம் அதிகரித்து இருந்தது. அந்த பயம்தான் அவனை இத்தனை நாட்களாக முடக்கிப் போட்டிருந்தது.

அவன் தனக்குத் தானே இக்கேள்வியைக் கேட்டுக் கொண்டான்: "நான் சீஸைக் கண்டுபிடிப்பதற்கான அதிக வாய்ப்பு எங்குள்ளது? இந்த 'ஸீ' சீஸ் நிலையத்திலா அல்லது புதிர்க் கட்டத்திலா?"

அவன் தன் மனத்தில் ஒரு காட்சியை உருவாக்கினான். முகத்தில் ஒரு புன்னகையுடன் புதிர்க் கட்டத்தில் தான் காலடி எடுத்து வைப்பதாக

அவன் கற்பனை செய்தான்.

இந்தக் காட்சி அவனை ஆச்சரியப்படுத்தினாலும், நல்லவிதமாக உணரச் செய்தது. அவ்வப்போது தான் அந்தப் புதிர்க் கட்டங்களில் தொலைந்து போவதுபோல் அவன் கண்டாலும், இறுதியில் புதிய சீஸையும், அதோடு வரும் இன்னும் பல நல்ல விஷயங்களையும் தன்னால் நிச்சயமாகக் கண்டுபிடிக்க முடியும் என்று உறுதியாக நம்பினான். அவன் துணிச்சலை வரவழைத்துக் கொண்டான்.

தான் புதிய சீஸைக் கண்டுபிடித்து, அதை மகிழ்ச்சியாகச் சுவைப்பது போன்ற, மிகவும் நம்பத்தக்க, மிகவும் யதார்த்தமான ஒரு காட்சியை அவன் தன் கற்பனையில் உருவாக்கினான்.

துளைகளைக் கொண்ட சுவிஸ் சீஸ், பளீர் ஆரஞ்சு நிறம் கொண்ட செடார் சீஸ், அமெரிக்க சீஸ், இத்தாலிய நாட்டு மாட்ஸரெல்லா சீஸ், பிரான்ஸ் நாட்டின் அற்புதமான, மிருதுவான, கேமம்பர்ட் சீஸ் போன்ற பல வகையான சீஸ்களைத் தான் ருசிப்பதாக அவன் கற்பனை செய்தான்.

அப்போது ஹெம் ஏதோ கூறியதைக் கேட்டு, தாங்கள் இன்னும் 'ஸீ' சீஸ் நிலையத்தில் இருப்பதை உணர்ந்தான்.

"ஹெம், சில சமயங்களில் நிலைமைகள் மாறுகின்றன. பிறகு அவை ஒருபோதும் முன்புபோல் இருப்பதில்லை. இதுவும் அப்படிப்பட்ட ஒரு சூழலாக எனக்குத் தோன்றுகிறது. அதுதான் வாழ்க்கை! வாழ்க்கை நகர்ந்து கொண்டே இருக்கிறது. எனவே நாமும் இங்கிருந்து புறப்படத்தான் வேண்டும்," என்று ஹா கூறினான்.

இளைத்துப் போயிருந்த ஹெம்மைப் பார்த்து, ஹா புத்தி கூற முயற்சித்தான். ஆனால் ஹெம்மின் பயம் கோபமாக மாறியிருந்ததால், அவன் ஹாவின் அறிவுரையைக் கேட்பதற்குத் தயாராக இல்லை.

ஹா தன் நண்பனிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொள்ள நினைக்கவில்லை. ஆனால், தாங்கள் எவ்வளவு அசட்டுத்தனமாக இருக்கிறோம் என்பதை நினைத்து அவனால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

ஹா அங்கிருந்து புறப்படத் தயாரானபோது, தான் மிகவும் துடிப்புடன் இருப்பதை உணரத் துவங்கினான். தன் அசட்டுத்தனத்தைப் பார்த்துச் சிரித்துவிட்டு, எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டு, தன்னால்

ஒருவழியாக முன்னேறிச் செல்ல முடிகிறது என்பதை நினைத்து அவனுக்கு உற்சாகம் ஏற்பட்டது.

ஹா சிரித்தவாறே, “புதிர்க் கட்டத்திற்குள் நுழைவதற்கான நேரம் இது!” என்று அறிவித்தான்.

ஹெம் சிரிக்கவில்லை. எந்த பதிலும் கூறவில்லை.

ஹா ஒரு சிறிய, கூர்மையான கல்லை எடுத்து, ஹெம்மின் சிந்தனைக்காக ஒரு கருத்தைச் சுவரில் எழுதினான். வரைவது ஹாவின் வழக்கம் என்பதால், அந்தக் கருத்தைச் சுற்றி ஒரு சீஸையும் அவன் வரைந்தான். ஹெம் எல்லாவற்றையும் உதறிவிட்டு, புன்னகை பூத்து, மனம் லேசாகி, புதிய சீஸைத் தேடச் செல்வதற்கு அது உதவும் என்று ஹா நம்பினான். ஆனால் ஹெம் அந்தப் படத்தைப் பார்க்க விரும்பவில்லை.

அதில் இவ்வாறு எழுதப்பட்டிருந்தது:




பிறகு, ஹா தன் தலையை வெளியே நீட்டி, கவலையுடன் புதிர்க் கட்டத்திற்குள் எட்டிப் பார்த்தான். சீஸ் இல்லாத இந்தச் சூழ்நிலைக்குள்

தான் எவ்வாறு சிக்கிக் கொண்டோம் என்பதைப் பற்றி நினைத்துப் பார்த்தான்.

புதிர்க் கட்டத்திற்குள் சீஸ் எதுவும் இல்லாமல் போகலாம் அல்லது தன்னால் அதைக் கண்டுபிடிக்க முடியாமல் போகலாம் என்று அவன் நம்பியிருந்தான். அச்சுறுத்தும் அத்தகைய நம்பிக்கைகள் அவனைச் செயல்படவிடாமல் தடுத்தன. அவை அவனைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கொன்று கொண்டிருந்தன.

ஹா புன்னகைத்தான். “யார் என்னுடைய சீஸை நகர்த்தியது?” என்று ஹெம் வியந்து கொண்டிருப்பான் என்பதை ஹா அறிந்தான். ஆனால், “சீஸோடு சேர்ந்து முன்னதாகவே நான் ஏன் அந்த இடத்தைவிட்டு நகரவில்லை?” என்று ஹா வியந்து கொண்டிருந்தான்.

அவன் புதிர்க் கட்டத்திற்குள் நுழையத் துவங்கியபோது, தான் புறப்பட்டு வந்த இடத்தைப் பின்னால் திரும்பிப் பார்த்து, அது தந்த சௌகரியத்தை உணர்ந்தான். அந்த இடத்தில் சில நாட்களாக சீஸ் இல்லாமல் இருந்தபோதிலும், அந்தப் பரிச்சயமான பகுதிக்குள் தான் கவர்ந்து இழுக்கப்படுவதை அவனால் உணர முடிந்தது.

உண்மையிலேயே அந்தப் புதிர்க் கட்டத்திற்குள் போகத் தனக்கு விருப்பம் உள்ளதா என்று ஹா வியக்கத் துவங்கினான். கவலையும் அதோடு சேர்ந்து கொண்டது. தனக்கு முன்னால் இருந்த ஒரு சுவரில் ஒரு மேற்கோளை எழுதி, அதைச் சற்று நேரம் உற்றுப் பார்த்தான்:




அவன் அதைப் பற்றிச் சிந்தித்தான்.

சில சமயங்களில் சிறிதளவு பயம் நல்லதுதான் என்பதை அவன் அறிந்திருந்தான். ஏதேனும் செய்யாவிட்டால் விஷயங்கள் மோசமாகிவிடும் என்று பயம் கொண்டிருந்தால், தேவையான நடவடிக்கை எடுப்பதற்கு

அது உதவும். ஆனால் எதுவுமே செய்ய முற்படாத அளவுக்கு பயந்து போயிருந்தால், அது நல்லதற்கல்ல.

அவன் தனது வலப்பக்கமாகப் பார்த்தான். புதிர்க் கட்டத்தின் அந்தப் பகுதிக்குள் அவன் அதற்கு முன் சென்றிருக்கவில்லை. பயம் அவனைப் பற்றிக் கொண்டது.

பிறகு, ஆழமாக சுவாசித்து, வலப்பக்கம் திரும்பி, முன்பின் தெரியாத அப்பகுதிக்குள் மெதுவாக ஓடத் துவங்கினான்.

அவன் தன் வழியைக் கண்டுபிடிக்க முயன்றபோது, 'ஸீ' சீஸ் நிலையத்தில் தான் நீண்ட காலம் காத்திருந்துவிட்டோமோ என்று கவலைப்பட்டான். நீண்ட நாட்களாக சீஸ் உட்கொண்டிராததால், அவன் இப்போது மிகவும் பலவீனமாக இருந்தான். புதிர்க் கட்டத்திற்குள் ஓடுவதற்கு அவனுக்கு அதிக நேரம் பிடித்ததோடு, வழக்கத்தைவிட அது சிரமமாகவும் இருந்தது.

மீண்டும் ஒரு வாய்ப்புக் கிடைத்தால், தன் சௌகரியமான இடத்தைவிட்டு விரைவாக வெளியேறி, மாற்றத்திற்கு ஏற்பத் தன்னை மாற்றிக் கொள்ளப் போவதாக அவன் தீர்மானித்தான். விஷயங்களை அது சுலபமாக்கும்.

அப்போது அவனுக்கு இவ்வாறு தோன்றியது: "ஒருபோதும் செய்யாமல் இருப்பதைவிட, தாமதமாகச் செய்வது மேல்." ஒரு பலவீனமான புன்னகை அவன் முகத்தில் படர்ந்தது.

அடுத்தப் பல நாட்கள், அங்கும் இங்குமாகச் சிறிதளவு சீஸை ஹா கண்டுபிடித்தான். ஆனால் எதுவும் நீண்ட நாட்கள் நிலைத்திருக்கவில்லை. ஹெம்மிற்குக் கொண்டுபோய்க் கொடுக்கும் அளவுக்குப் போதுமான சீஸைக் கண்டுபிடித்து, புதிர்க் கட்டத்திற்குள் தன்னுடன் வருவதற்கு அவனை உற்சாகப்படுத்த ஹா விரும்பினான்.

ஆனால் ஹாவிடம் போதிய நம்பிக்கை இருக்கவில்லை. புதிர்க் கட்டம் குழப்புவதாக இருந்தது. கடந்த முறை அங்கு வந்தபோது இருந்ததைவிட, விஷயங்கள் இப்போது மாறியிருந்ததுபோல் அவனுக்குத் தோன்றியது.

முன்னேறிச் சென்று கொண்டிருப்பதாக அவன் நினைத்தபோது, தாழ்வாரங்களில் திக்குத் தெரியாமல் தொலைந்து போனான். ஈரடி முன்னேறினால் ஓரடி பின்னுக்கு வருவதாகப் பட்டது. அது சவாலாக

இருந்தாலும் மீண்டும் புதிர்க் கட்டத்திற்குள் நுழைந்து, சீஸை வேட்டையாடுவது தான் நினைத்த அளவுக்கு அச்சுறுத்துவதாக இல்லை என்பதை உணர்ந்தான்.

நாட்கள் நகர நகர, புதிய சீஸைக் கண்டுபிடிக்கும் தனது எதிர்பார்ப்பு யதார்த்தமானதுதானா என்று அவன் வியக்கத் துவங்கினான். தன்னால் மெல்ல முடிந்ததைவிட அதிக அளவு கடித்துவிட்டோமோ என்று நினைத்தான். ஆனால் இக்கணத்தில் மெல்லுவதற்குத் தன்னிடம் ஏதும் இல்லை என்பதை நினைத்துச் சிரித்தான்.

அவன் ஊக்கமிழக்கத் துவங்கியபோதெல்லாம், தான் இப்போது மேற்கொண்டிருக்கும் நடவடிக்கை, அது எவ்வளவு அசௌகரியமானதாக இருந்தாலும், யதார்த்தத்தில், சீஸ் இல்லாத சூழ்நிலையில் இருப்பதைவிடச் சிறப்பானதுதான் என்று தனக்குத் தானே நினைவூட்டிக் கொண்டான். இப்போது விஷயங்கள் தனக்கு நிகழ அனுமதிக்காமல், அவன் அவற்றைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதாக நினைத்தான்.

ஸ்னிஃப் மற்றும் ஸ்கரியால் முன்னேறிச் செல்ல முடியும் என்றால், தன்னாலும் முடியும் என்று தனக்கு நினைவுபடுத்திக் கொண்டான்.

பின்னாளில், கடந்தகால விஷயங்களை அவன் அசைபோட்டுப் பார்த்தபோது, 'ஸீ' சீஸ் நிலையத்தில் இருந்த சீஸ் இரவோடு இரவாகக் காணாமல் போகவில்லை என்பதை அவன் உணர்ந்தான். ஆனால் அது இரவோடு இரவாகக் காணாமல் போனதாகத்தான் முன்பு அவன் நம்பிக் கொண்டிருந்தான். 'ஸீ' சீஸ் நிலையத்தில் கடைசியில் எஞ்சியிருந்த சீஸின் அளவு குறைந்து கொண்டே வந்திருந்தது. மிச்சமிருந்த சீஸும் பழையதாகிவிட்டதால் அவ்வளவு சுவையாக இருக்கவில்லை.

அந்தப் பழைய சீஸில் பூஞ்சைக் காளான்கூட வளரத் துவங்கியிருக்கக்கூடும். ஆனால் அதை அவன் கவனித்திருக்கவில்லை. தான் விரும்பியிருந்தால், நிகழவிருந்த விஷயங்களைத் தன்னால் பார்த்திருக்க முடியும் என்பதை அவன் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. ஆனால் அவன் அவ்வாறு செய்யவில்லை.

விஷயங்களைத் தொடர்ந்து கவனித்து வந்திருந்து, மாற்றத்தை எதிர்பார்த்திருந்தால், சீஸ் காணாமல் போனது தன்னை ஆச்சரியப்படுத்தியிருக்காது என்பதை ஹா இப்போது உணர்ந்தான். ஸ்னிஃபும் ஸ்கரியும் ஒருவேளை அவற்றைத்தான் செய்து வந்திருக்க வேண்டும்.

இப்போதில் இருந்து தான் மிகவும் எச்சரிக்கையாக நடந்து கொள்ளப் போவதாக அவன் தீர்மானித்தான். மாற்றம் நிகழும் என்று எதிர்பார்த்து, மாற்றத்தை எதிர்நோக்கி இருக்கப் போவதாக அவன் முடிவெடுத்தான். தன் உள்ளுணர்வுகளின்மீது நம்பிக்கை கொண்டு, மாற்றம் எப்போது நிகழும் என்பதை உணர்ந்து கொண்டு, அதற்கேற்பத் தன்னை மாற்றிக் கொள்வதாகத் தீர்மானித்தான்.

ஓர் ஓய்விற்காகத் தன் ஓட்டத்தை நிறுத்திவிட்டு, புதிர்க் கட்டத்தின் சுவரில் இவ்வாறு எழுதினான்:




இறுதியில், ஹா ஒரு பெரிய சீஸ் நிலையத்தை வந்தடைந்தான். ஆனால் அந்த சீஸ் நிலையம் காலியாக இருந்ததைக் கண்டு ஏமாற்றம் அடைந்தான். "இந்த ஏமாற்ற உணர்வு இப்போதெல்லாம் அடிக்கடி

ஏற்படுகின்றது," என்று அவன் நினைத்தான். தன் முயற்சியைக் கைவிட்டுவிட வேண்டும்போல் அவனுக்குத் தோன்றியது.

ஹா தனது உடல் வலிமையை இழந்து கொண்டிருந்தான். தன்னால் இனி பிழைத்திருக்க முடியாது என்று பயந்தான். மீண்டும் 'ஸீ' சீஸ் நிலையத்திற்குத் திரும்பிச் சென்றுவிட எண்ணினான். தான் அங்கு திரும்பிச் சென்று, ஒருவேளை ஹெம்மும் அங்கு இருந்தால், தான் தனியாக இருக்க மாட்டோம் என்று அவன் நினைத்தான். அப்போது, "உங்களுக்கு பயமே இல்லையென்றால், நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்ற அதே கேள்வியை மீண்டும் கேட்டான்.

அவன் தன் கடந்தகால பயத்தை வெற்றி கொண்டுவிட்டதாக நினைத்திருந்தான். ஆனால் உண்மையில் அதிகமாகவே பயப்பட்டான். தான் உண்மையில் எதைப் பற்றி பயப்படுகிறோம் என்பது அவனுக்கு உறுதியாகத் தெரிந்திருக்கவில்லை. ஆனால், வலிமை குறைந்து, பலவீனமாக இருந்த நிலையில், தனியாகச் செல்வதற்குத் தான் பயப்படுவதை அவன் அறிந்தான்.

ஹெம் அங்கிருந்து சென்றுவிட்டானா, அல்லது தன் சொந்த பயங்களால் முடக்கப்பட்டு அங்கேயே இருக்கிறானா என்று ஹா வியந்தான். புதிர்க் கட்டத்தில் இருந்தபோது தான் சிறப்பாக உணர்ந்த நேரங்களை அவன் நினைத்துப் பார்த்தான். எப்போதெல்லாம் அவன் முன்னேறிச் சென்று கொண்டிருந்தானோ, அப்போதெல்லாம் தான் உற்சாகமாக இருந்ததை அவன் அறிந்தான்.

தனக்கு நினைவூட்டிக் கொள்வதற்கும், ஒருவேளை தன்னைப் பின்தொடர்ந்து ஹெம் அந்த வழியாக வந்தால் அவனுக்கும் பயன்படட்டும் என்பதற்காகவும், அங்கிருந்த ஒரு சுவரில் அவன் இவ்வாறு எழுதினான்:




தன் முன்னால் இருந்த இருண்ட பாதையைப் பார்த்த ஹா, தன் பயத்தைப் பற்றி உணர்ந்திருந்தான். எனக்கு முன்னால் என்ன இருக்கிறது? அது காலியாக உள்ளதா? அங்கு ஆபத்துக்கள் பதுங்கியுள்ளனவா? தனக்கு நிகழக்கூடிய அனைத்துவிதமான அச்சுறுத்தும் விஷயங்களைப்

பற்றி அவன் கற்பனை செய்யத் துவங்கினான். பயத்தில் அவன் இறந்துவிடுவான்போல் இருந்தது.

பிறகு அவன் தன்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டான். தன்னுடைய பயங்கள், விஷயங்களை மேலும் மோசமாக்குவதை அவன் உணர்ந்தான். எனவே, அவன் பயப்படாமல் இருந்தால் என்ன செய்திருப்பானோ அதைச் செய்தான். அவன் ஒரு புதிய பாதையில் பயணித்தான்.

இருண்ட தாழ்வாரத்தின் வழியாக அவன் ஓடத் துவங்கியபோது, அவன் புன்னகைக்கத் துவங்கினான். எது தன் ஆன்மாவிற்குப் போஷாக்கு அளித்தது என்பதை அவன் கண்டறிந்து கொண்டிருந்தான். ஆனால் ஹா அதை இன்னும் முழுமையாக உணர்ந்திருக்கவில்லை. தன் பயத்தை ஒதுக்கிவிட்டு, தான் எதிர்கொள்ளவிருந்த விஷயங்கள்மீது நம்பிக்கை வைத்தான் - அவை எப்படிப்பட்ட விஷயங்கள் என்பது அவனுக்குத் தெரியாதிருந்தபோதும்கூட!

நாளுக்கு நாள் தான் அதிக மகிழ்ச்சியுடன் இருந்தது அவனுக்கே ஆச்சரியத்தை ஏற்படுத்தியது. "நான் ஏன் இவ்வளவு மகிழ்ச்சியாக உணர்கிறேன்? என்னிடம் எந்த சீஸூம் இல்லை. நான் எங்கே சென்று கொண்டிருக்கிறேன் என்றும் எனக்குத் தெரியவில்லை. பின்னர் எப்படி நான் இவ்வளவு உற்சாகமாக உணர்கிறேன்?" என்று ஹா வியந்தான்.

தான் ஏன் மகிழ்ச்சியாக உணர்கிறோம் என்பதை அவன் விரைவில் கண்டுகொண்டான்.

அவன் அங்கு ஒரு கணம் நின்று, சுவரில் இவ்வாறு எழுதினான்:




தன் சொந்த பயம்தான் தன்னைக் கட்டுப்படுத்தி வைத்திருந்தது என்பதை ஹா உணர்ந்தான். ஒரு புதிய திசையில் பயணம் செய்தது அவனை விடுவித்தது.

புதிர்க் கட்டடத்தின் இப்பகுதியில் வீசிய குளிர்ந்த காற்றை அவன் இப்போது உணர்ந்தான். அது அவனுக்குப் புத்துணர்ச்சி அளிப்பதாக இருந்தது. அவன் சிலமுறை ஆழ்ந்து சுவாசித்தான். அது அவனுக்குப் புத்துணர்வு ஊட்டியது. அவன் தன் பயத்தை வெற்றி கொண்டவுடன், இப்பயணம் அவன் நினைத்ததைவிட அதிக மகிழ்ச்சியூட்டுவதாக அமைந்தது.

ஹா இவ்வளவு மகிழ்ச்சியாக உணர்ந்து நெடுங்காலம் ஆயிற்று. ஒரு விஷயத்திற்காக முயற்சிப்பது எவ்வளவு குதூகலமானது என்பதை அவன் கிட்டத்தட்ட மறந்துவிட்டிருந்தான்.

விஷயங்களை மேலும் மேம்படுத்த, ஹா தன் மனத்தில் மீண்டும் ஒரு காட்சியைத் தீட்டினான். செடார் சீஸ்முதல் ப்ரை சீஸ்வரை, அனைத்து சீஸ்களும் நிறைந்திருந்த ஒரு சீஸ் குவியலுக்கு மத்தியில் தான் அமர்ந்திருப்பதாக அவன் மிகவும் யதார்த்தமான, விலாவாரியான காட்சியைக் கற்பனை செய்தான். தனக்கு விருப்பமான பல சீஸ்களைத் தான் உண்பதாக அவன் தன் மனத்தில் பார்த்தான். அவன் கண்ட காட்சி அவனுக்கு மகிழ்வூட்டியது. அந்த சீஸ்களின் சுவையைத் தான் எவ்வளவு ரசித்து அனுபவிப்போம் என்று அவன் கற்பனை செய்தான்.

புதிய சீஸைத் தான் அனுபவிப்பதுபோல் அவன் எவ்வளவு தெளிவாகக் கற்பனை செய்தானோ, அந்த அளவுக்கு அது அதிக உண்மையானதாகவும், நம்பகத்தன்மை நிறைந்ததாகவும் ஆனது. புதிய சீஸைத் தான் கண்டுபிடிக்கப் போவதை அவனால் உணர முடிந்தது.

அவன் இவ்வாறு எழுதினான்:




தான் இழந்து கொண்டிருந்தவற்றைப் பற்றிச் சிந்திப்பதற்குப் பதிலாக, தனக்குக் கிடைக்கக்கூடிய இலாபங்களைப் பற்றி ஹா சிந்திக்கத் துவங்கினான்.

ஒரு மாற்றம் மோசமான விளைவுக்குத்தான் வழிவகுக்கும் என்று தான் ஏன் எப்போதும் சிந்தித்து வந்துள்ளோம் என்று நினைத்து அவன் வியந்தான். மாற்றம் சிறந்தவற்றிற்கும் இட்டுச் செல்லக்கூடும் என்பதை இப்போது உணர்ந்தான். “நான் ஏன் இதை முன்னதாகவே பார்க்கவில்லை?” என்று அவன் தன்னைத் தானே கேட்டுக் கொண்டான்.

பிறகு அந்தப் புதிர்க் கட்டத்தின் ஊடாக அவன் அதிக வலிமையோடும் இலாவகத்தோடும் ஓடினான். விரைவில் அவன் ஒரு சீஸ் நிலையத்தைக் கண்டான். அதன் வாயிலில் சிறிய சீஸ் துண்டுகள் சிதறிக் கிடந்ததைக் கண்டவுடன் உற்சாகம் அடைந்தான்.

அந்த வகையான சீஸை அவன் அதற்கு முன்பு பார்த்ததேயில்லை. அவை மிகவும் ருசியாக இருந்தன. வாசலில் இருந்த புதிய சீஸ் துண்டுகளின் பெரும்பகுதியை அவன் சாப்பிட்டான். அவன் மீண்டும் வலுப்பெறத் துவங்கினான்.

அதிக உற்சாகத்துடன் அவன் அந்த சீஸ் நிலையத்திற்குள் நுழைந்தான். ஆனால் அது காலியாக இருந்ததைக் கண்டு மனம் நொந்தான். வேறு யாரோ அங்கு ஏற்கனவே வந்து, அங்கிருந்த சீஸை எடுத்துக் கொண்டு, ஒருசில சீஸ் துண்டுகளை மட்டும் விட்டுச் சென்றிருந்தனர்.

தான் மட்டும் விரைவாகச் செயல்பட்டிருந்தால், ஏராளமான புதிய சீஸ் இங்கு தனக்குக் கிடைத்திருக்கும் என்பதை அவன் உணர்ந்தான். ஹெம் தன்னுடன் வரத் தயாராக இருக்கிறானா என்பதைத் தெரிந்து கொள்ள ‘ஸீ’ சீஸ் நிலையத்திற்குத் திரும்பிச் செல்ல ஹா தீர்மானித்தான்.

தான் வந்த வழியே திரும்பிச் செல்லத் துவங்கியபோது, சற்று நிறுத்தி, சுவரில் இவ்வாறு எழுதினான்:




சில நாட்களுக்குப் பின், ஹா 'ஸீ' சீஸ் நிலையத்தை வந்தடைந்தான். ஹெம் அங்கு இருப்பதைக் கண்டான். புதிய சீஸ் துண்டுகள் சிலவற்றை அவன் ஹெம்மிற்குக் கொடுத்தான். ஆனால் ஹெம் அதை வாங்க மறுத்தான். தன் நண்பனின் செய்கையை ஹெம் பாராட்டினான். ஆனால், "எனக்குப் புதிய சீஸ் பிடிக்கும் என்று நான் நினைக்கவில்லை. அது

எனக்குப் பழக்கமில்லை. எனக்கு என் பழைய சீஸ்தான் வேண்டும். நான் விரும்புவது எனக்குக் கிடைக்கும்வரை, நான் மாறப் போவதில்லை," என்று கூறினான்.

ஹா ஏமாற்றத்துடன் தன் சொந்த வழியில் திரும்பிச் சென்றான். வேறோர் இடத்தை வந்தடைந்தபோது, தன் நண்பன் தன்னுடன் இல்லாததை நினைத்து வருந்தினான். ஆனால் தான் புதிதாகக் கண்டுபிடித்துக் கொண்டிருந்த விஷயங்களைத் தான் விரும்புவதை அவன் தெரிந்து கொண்டான்.

தன்னிடம் இருந்த பயத்தால் தான் துரத்தப்படாதவரை தான் மகிழ்ச்சியாக இருப்பதை அவன் அறிந்து கொண்டான். அவன் இப்போது செய்து கொண்டிருந்தது அவனுக்குப் பிடித்திருந்தது.

சீஸ் இல்லாமல் 'ஸீ' சீஸ் நிலையத்தில் இருந்தபோது பலவீனமாக உணர்ந்த அளவுக்கு ஹா இப்போது பலவீனமாக உணரவில்லை. தன் பயம் தன்னைத் தடுத்து நிறுத்துவதற்குத் தான் அனுமதிக்கவில்லை என்ற உணர்வும், ஒரு புதிய பாதையைத் தான் தேர்ந்தெடுத்திருக்கிறோம் என்ற அறிதலும், அவனுக்குப் போஷாக்களித்து, வலிமையைக் கொடுத்தன.

தனக்குத் தேவையானதை விரைவில் கண்டுபிடித்து விடுவோம் என்பதை அவன் இப்போது உணர்ந்தான். உண்மையில், தான் தேடிக் கொண்டிருந்ததைத் தான் ஏற்கனவே கண்டுபிடித்துவிட்டதுபோல் அவன் உணர்ந்தான்.

ஒரு விஷயத்தை உணர்ந்து அவன் புன்னகைத்தான்.




நாம் எதைக் குறித்துப் பயப்படுகிறோமோ, அந்த விஷயம் நாம் கற்பனை செய்யும் அளவுக்கு மோசமானதல்ல என்பதை ஹா மீண்டும் உணர்ந்தான். பயம் நம் மனத்தை ஆக்கிரமிக்க நாம் அனுமதிப்பது, உண்மையாக நிலவும் சூழ்நிலையைவிட மோசமானது.

புதிய சீஸைத் தன்னால் ஒருபோதும் கண்டுபிடிக்க முடியாது என்று அவன் மிகவும் பயந்துபோய் இருந்ததால், அதைத் தேடக்கூட விரும்பவில்லை. ஆனால் தன் பயணத்தைத் துவங்கியதிலிருந்து, தொடர்ந்து முன்னேறிச் செல்வதற்குப் போதுமான சீஸைத் தாழ்வாரங்களில் அவன் கண்டான். இப்போது இன்னும் அதிகமான சீஸைக் கண்டுபிடிக்க அவன் ஆர்வமாக இருந்தான். வெறுமனே முன்னோக்கிப் பார்க்கும் செயலே அவனுக்கு உற்சாகமளிப்பதாக ஆகிக் கொண்டு வந்தது.

கவலைகளும் பயங்களும் அவனது பழைய சிந்தனையைக் கலங்கடித்துக் கொண்டிருந்தன. தன்னிடம் போதுமான சீஸ் இருக்காது, அல்லது தான் விரும்பும் காலம்வரை சீஸ் தன்னிடம் இருக்காது என்று அவன் முன்பு எண்ணியிருந்தான். எது சரியாக நடக்கக்கூடும் என்று நினைப்பதற்குப் பதிலாக எது தவறாகப் போகக்கூடும் என்று முன்பு அவன் நினைத்திருந்தான்.

'ஸீ' சீஸ் நிலையத்தைவிட்டுப் புறப்பட்ட நாளில் இருந்து இந்த சிந்தனைகள் மாறியிருந்தன. சீஸ் அகற்றப்பட்டிருக்கவே கூடாது என்றும், மாற்றம் என்பது சரியானதல்ல என்றும் முன்பு அவன் நம்பினான்.

நாம் எதிர்பார்த்திருக்கிறோமோ இல்லையோ, மாற்றம் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டுதான் இருக்கிறது என்பதை அவன் இப்போது உணர்ந்தான். மாற்றத்தை நாம் எதிர்பார்க்காமல் இருந்தாலோ, அல்லது அதைத் தேடாமல் இருந்தாலோ மட்டுமே அந்த மாற்றம் நமக்கு ஆச்சரியமளிக்கும்.

அவன் தனது நம்பிக்கைகளை மாற்றியிருந்ததை உணர்ந்தபோது, தன் ஓட்டத்தைச் சற்று நிறுத்திவிட்டு, சுவரில் இவ்வாறு எழுதினான்:




ஹா இன்னும் எந்தவொரு சீஸையும் கண்டுபிடித்திருக்கவில்லை என்றபோதிலும், புதிர்க் கட்டங்களின் ஊடாக ஓடிக் கொண்டிருந்தபோது, தான் ஏற்கனவே கற்றிருந்தவற்றைப் பற்றி நினைத்துப் பார்த்தான்.

தனது புதிய நம்பிக்கைகள் புதிய நடத்தைகளை ஊக்குவிப்பதை ஹா இப்போது உணர்ந்தான். சீஸ் இல்லாத அந்த ‘ஸீ’ சீஸ் நிலையைத்திற்கு, முன்பு மீண்டும் மீண்டும் அவன் சென்று கொண்டிருந்தபோது அவன் நடந்து கொண்ட விதத்திலிருந்து, இன்று அவன் நடந்து கொண்டிருக்கும் விதம் முற்றிலும் வேறாக இருந்தது.

உங்கள் நம்பிக்கைகளை நீங்கள் மாற்றும்போது, உங்கள் நடவடிக்கைகள் மாறும் என்பதை அவன் அறிந்தான்.

ஒரு மாற்றம் நமக்குத் தீங்கு விளைவிக்கும் என்று பயந்து நாம் அதை எதிர்க்கலாம். அல்லது, புதிய சீஸைக் கண்டுபிடிப்பது நமக்கு உதவும் என்று நம்பி, மாற்றத்தை நாம் ஆரத் தழுவலாம்.

இவையெல்லாம் நீங்கள் எதை நம்புகிறீர்கள் என்பதைப் பொறுத்தது.

சுவரில் அவன் இவ்வாறு எழுதினான்:




தான் விரைவாக மாற்றத்தை எதிர்கொண்டு, 'ஸீ' சீஸ் நிலையத்தைவிட்டு முன்னதாகவே வெளியேறி இருந்தால், இன்று நல்ல நிலையில் இருந்திருப்போம் என்பதை ஹா அறிந்திருந்தான். உடல்ரீதியாகவும் ஆன்மரீதியாகவும் அதிக வலிமை பெற்று, புதிய

சீஸைக் கண்டுபிடிக்கும் சவாலை அவன் இன்னும் சிறப்பாகச் சமாளித்திருப்பான். உண்மையில், மாற்றம் ஏற்கனவே நிகழ்ந்துவிட்டது என்ற விஷயத்தை மறுத்துத் தன் நேரத்தை வீணடித்ததற்கு மாறாக, மாற்றத்தை அவன் எதிர்பார்த்திருந்தால், இந்நேரம் அவன் புதிய சீஸைக் கண்டுபிடித்திருக்கக்கூடும்.

அவன் தன் கற்பனையை மீண்டும் பயன்படுத்தி, புதிய சீஸைத் தான் கண்டுபிடித்துச் சுவைப்பதாகத் தன் மனத்தில் காட்சிப்படுத்திப் பார்த்தான். புதிர்க் கட்டத்தில் தனக்குப் பரிச்சயமில்லாத பல பகுதிகளுக்கும் செல்வதென்று அவன் தீர்மானித்தான். அங்கும் இங்குமாக அவன் சிறு சீஸ் துண்டுகளைக் கண்டான். ஹா தனது வலிமையையும் நம்பிக்கையையும் மீண்டும் பெறத் துவங்கினான்.

தான் எங்கிருந்து இவ்வளவு தூரம் வந்துள்ளோம் என்பதைப் பின்னோக்கிப் பார்த்தபோது, பல இடங்களிலும் சுவரில் தான் எழுதி வந்துள்ளதை நினைத்து மகிழ்ந்தான். ஹெம் ஒருவேளை 'ஸீ' சீஸ் நிலையத்தைவிட்டு வெளியேற முடிவு செய்தால், புதிர்க் கட்டத்தின் ஊடாகப் பயணிப்பதற்கு அவை அவனுக்கு வழித்தடமாக இருந்து உதவும் என்று அவன் நம்பினான்.

தான் சரியான பாதையில்தான் சென்று கொண்டிருக்கிறோம் என்று ஹா நம்பிக்கையுடன் இருந்தான். சுவரில் இருந்த வாசகங்களைப் படித்துவிட்டு, ஹெம் தன் சொந்த வழியைக் கண்டுபிடிப்பதற்கான சாத்தியக்கூற்றைப் பற்றி ஹா நினைத்துப் பார்த்தான்.

சில நாட்களாகத் தான் சிந்தித்துக் கொண்டிருந்த ஒரு விஷயத்தை அவன் ஒரு சுவரில் எழுதினான்:




இப்போது ஹா தன் கடந்தகாலத்தை முற்றிலுமாக உதறிவிட்டு, நிகழ்காலத்திற்கு ஏற்பத் தன்னைப் பொருத்திக் கொண்டிருந்தான்.

பெரும் வலிமையோடும் வேகத்தோடும் புதிர்க் கட்டத்தின் ஊடாக அவன் தொடர்ந்து ஓடினான். விரைவில் அது நிகழ்ந்தது.

எப்போதும் தான் புதிர்க் கட்டத்திலேயே இருந்து வந்துள்ளது போன்ற ஓர் உணர்வு அவனுக்குள் எழுந்தபோது, அவனது பயணத்தின் இந்தப் பகுதி, விரைவாகவும் மகிழ்ச்சியாகவும் ஒரு முடிவுக்கு வந்தது.

தனக்குப் பரிச்சயமில்லாத ஒரு தாழ்வாரத்தின் வழியாக ஹா ஓடிச் சென்று, அதன் மூலையைச் சென்றடைந்தபோது, அவன் 'என்' சீஸ் நிலையத்தில் புதிய சீஸைக் கண்டான்.

உள்ளே சென்றபோது அவன் கண்ட காட்சி அவனைத் திக்குமுக்காட வைத்தது. அங்கு எல்லா இடத்திலும் ஏராளமான சீஸ்கள் உயர உயரமாகக் குவித்து வைக்கப்பட்டிருந்தன. அங்கு தான் கண்ட எல்லா சீஸையும் அவனால் அடையாளம் காண முடியவில்லை. அங்கிருந்த சில சீஸ் வகைகள் அவனுக்குப் புதிதாக இருந்தன.

இது உண்மையா அல்லது கற்பனையா என்று அவன் ஒரு கணம் வியந்தான். பின்பு, தனது பழைய நண்பர்களான ஸ்னிஃபையும் ஸ்கரியையும் அவன் அங்கு பார்த்தான்.

ஸ்னிஃப் தன் தலையை அசைத்து ஹாவை வரவேற்றது. ஸ்கரி தன் காலை ஆட்டியது. அவற்றின் குட்டிப் பானை வயிறுகள், அவை அந்த இடத்தில் சில காலம் இருந்து வந்துள்ளதைக் காட்டின.

ஹா அவற்றிற்கு வேகவேகமாக வணக்கம் கூறிவிட்டு, விரைவில் தனக்குப் பிடித்தமான சீஸ் ஒவ்வொன்றையும் எடுத்துக் கடித்தான். தனது காலணிகளைக் கழற்றி, அவற்றை ஒன்றாக இணைத்துக் கட்டி, ஒருவேளை அவை தனக்கு மீண்டும் தேவைப்படலாம் என்று நினைத்து அவற்றைத் தன் கழுத்தைச் சுற்றித் தொங்கவிட்டுக் கொண்டான்.

ஸ்னிஃபும் ஸ்கரியும் சிரித்தன. தமது பிரமிப்பை வெளிப்படுத்தும் விதத்தில் அவை தலையசைத்தன. அப்போது ஹா புதிய சீஸிற்குள் குதித்தான். வயிறு நிறையச் சாப்பிட்டப் பின், ஒரு துண்டு சீஸை எடுத்து உயர்த்திப் பிடித்தபடி, “மாற்றத்தை வரவேற்போம்,” என்று மகிழ்ச்சியாகக் கூவினான்.

புதிய சீஸை அனுபவித்தவாறே, ஹா தான் கற்றுக் கொண்டுள்ளவற்றை நினைத்துப் பார்த்தான்.

மாறுவதற்குத் தான் பயந்திருந்தபோது, எப்போதோ தீர்ந்து போய்விட்டிருந்த பழைய சீஸைப் பற்றிய மாயையைக் கெட்டியாகப்

பிடித்துக் கொண்டிருந்ததை அவன் உணர்ந்தான்.

அப்படியானால், எது அவனை மாற்றியது? பசியால் இறந்துவிடுவோம் என்ற பயமா? நிச்சயமாக அந்த பயம் தனக்கு உதவியுள்ளதை நினைத்து ஹா புன்னகைத்தான்.

பின்னர் சிரித்தபடியே, தன்னைப் பார்த்தும், தன் தவறுகளைப் பார்த்தும் தான் சிரிக்கக் கற்றுக் கொண்டவுடன் தான் மாறத் துவங்கியதை உணர்ந்தான். மாறுவதற்கான வேகமான வழி, உங்கள் சொந்தத் தவறுகளைக் கண்டு சிரிப்பதுதான் என்பதை அவன் உணர்ந்தான். அப்போது, எல்லாவற்றையும் மறந்துவிட்டு, உங்களால் வேகமாக முன்னோக்கிச் செல்ல முடியும்.

தொடர்ந்து முன்னேறிச் செல்வது பற்றிய சில பயனுள்ள விஷயங்களைத் தனது சுண்டெலி நண்பர்களிடமிருந்து தான் கற்றுக் கொண்டுள்ளதை ஹா அறிந்திருந்தான். வாழ்க்கையை அவை எளிதாக அமைத்துக் கொண்டிருந்தன. விஷயங்களை அவை அதிகமாக ஆய்வு செய்யவில்லை, அதிக சிக்கலானதாக ஆக்கவும் இல்லை. சூழ்நிலை மாறி, சீஸ் அங்கிருந்து நகர்த்தப்பட்டவுடன், சுண்டெலிகளும் மாறி, அந்த சீஸோடு சேர்ந்து நகர்ந்தன. ஹா அந்தப் படிப்பினையை நிச்சயமாக நினைவில் வைத்திருப்பான்.

அவன் தன் அற்புதமான மூளையைப் பயன்படுத்தி, சுண்டெலிகளைவிடச் சிறப்பான விஷயங்களைச் செய்தான்.

இன்னும் சிறப்பான ஏதோ ஒன்றைத் தான் கண்டுபிடிக்கப் போவதாக, விலாவாரியாக அவன் கற்பனை செய்தான்.

கடந்தகாலத்தில் தான் செய்த தவறுகளை ஆய்வு செய்து, தன் எதிர்காலத்தைத் திட்டமிடுவதற்கு அவற்றைப் பயன்படுத்தினான். மாற்றத்தைக் கையாள நம்மால் கற்றுக் கொள்ள முடியும் என்பதை அவன் அறிந்திருந்தான்.

விஷயங்களை எளிமையாக வைத்துக் கொள்வது, வளைந்து கொடுத்துப் போவது, விரைந்து செயல்படுவது ஆகியவற்றின் அவசியம் குறித்து உங்களால் அதிக விழிப்புணர்வுடன் இருக்க முடியும்.

உங்களிடம் குடிகொண்டிருக்கும் அச்சுறுத்தும் நம்பிக்கைகளால், விவகாரங்களை நீங்கள் அதிக சிக்கலானவையாக ஆக்க வேண்டியதில்லை, உங்களைக் குழப்பிக் கொள்ளவும் தேவையில்லை.

சிறிய மாற்றங்கள் நிகழத் துவங்கும்போது நீங்கள் அவற்றைக் கவனித்து வந்தால், எதிர்காலத்தில் வரக்கூடிய பெரிய மாற்றத்திற்கு நீங்கள் உங்களைத் தயார் செய்து கொள்ளலாம்.

மாற்றத்திற்கு ஏற்ப விரைவாகத் தன்னை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதை அவன் அறிந்து கொண்டான். ஏனெனில், உரிய காலத்திற்குள் உங்களைத் தயார் செய்து கொள்ளாவிட்டால், உங்களால் ஒருபோதும் அந்த மாற்றத்திற்கு ஏற்றவாறு உங்களை மாற்றிக் கொள்ள முடியாது.

மாற்றத்திற்கான மாபெரும் தடை நமக்குள்தான் இருக்கிறது என்பதையும், நாம் மாறாதவரை எதுவும் மேம்படாது என்பதையும் அவன் ஏற்றுக் கொண்டான்.

மிக முக்கியமாக, நாம் அடையாளம் காண்கிறோமோ இல்லையோ, புதிய சீஸ் எப்போதுமே நமக்காக வெளியில் காத்திருக்கிறது என்பதையும் அவன் உணர்ந்தான். உங்கள் பயத்தை வெற்றி கொண்டு, சாகசப் பயணத்தை நீங்கள் மகிழ்ச்சியாக அனுபவிக்கும்போது, அதற்கான வெகுமதி உங்களுக்கு நிச்சயமாகக் கிடைக்கும்.

சில பயங்களை நாம் மதிக்கத்தான் வேண்டும். ஏனெனில், உண்மையான ஆபத்தில் இருந்து அவை நம்மைப் பாதுகாக்கும். ஆனால் நமது பெரும்பான்மையான பயங்கள் அர்த்தமற்றவை என்பதையும், நாம் மாற வேண்டிய தேவை ஏற்படும்போது, மாறவிடாமல் அவை நம்மைத் தடுக்கின்றன என்பதையும் அவன் உணர்ந்தான்.

அந்த நேரத்தில் அவனுக்கு அது பிடிக்கவில்லைதான். ஆனால், மாற்றம் அவனுக்கு மாறுவேடம் தரித்து வந்த ஓர் ஆசீர்வாதமாக அமைந்தது. ஏனெனில், அதிகச் சிறப்பான சீஸைக் கண்டுபிடிக்க அது அவனுக்கு உதவியது.

அதோடு, அவன் தன்னைப் பற்றிய சில நல்ல விஷயங்களையும் கண்டுகொண்டான்.

தான் கற்று வந்துள்ள பாடங்களை ஹா அசைபோட்டுப் பார்த்தபோது, தனது நண்பன் ஹெம்மைப் பற்றி நினைத்தான். 'ஸீ' சீஸ் நிலையம் மற்றும் புதிர்க் கட்டம் நெடுகிலும் உள்ள சுவர்களில் தான் எழுதியுள்ள மேற்கோள்களில் எவற்றையேனும் அவன் படித்திருப்பானா என்று ஹா வியந்தான்.

எல்லாவற்றையும் உதறிவிட்டு, தொடர்ந்து முன்னேறிச் செல்வதற்கு ஹெம் தீர்மானித்தானா? புதிர்க் கட்டத்திற்குள் நுழைந்து, தன் வாழ்க்கையைச் சிறப்பாக்கக்கூடிய விஷயங்களை அவன் கண்டுபிடித்தானா?

அல்லது மாறுவதற்கு விருப்பமில்லாமல், அதே இடத்தில் உழன்று கொண்டிருந்தானா?

ஹெம் இன்னும் அங்கு இருக்கிறானா என்பதைக் கண்டறிவதற்கு மீண்டும் 'ஸீ' சீஸ் நிலையத்திற்குச் சென்று வரலாமா என்று ஹா யோசித்தான். ஒருவேளை ஹெம்மை அவனால் கண்டுபிடிக்க முடிந்தால், அவனிருந்த இக்கட்டான சூழ்நிலையிலிருந்து எப்படி வெளியேறுவது என்பதை அவனுக்குத் தன்னால் காட்ட முடியும் என்று ஹா நினைத்தான். ஆனால் மாறுவது பற்றித் தன் நண்பனிடம் ஏற்கனவே பேசி, அவனை மாற்ற முயற்சித்தபோது ஏற்பட்ட அனுபவத்தை அவன் நினைவுகூர்ந்தான்.

ஹெம் தன் சௌகரியமான இடத்தைவிட்டு வெளிவந்து, தன் பயங்களை வெற்றி கொண்டு, தன் சொந்த வழியைத் தானே கண்டுபிடித்தாக வேண்டும். வேறு யாராலும் அவனுக்காக அதைச் செய்ய முடியாது. அல்லது அதைச் செய்யுமாறு வேறு யாராலும் அவனைக் கட்டாயப்படுத்த முடியாது. மாறுவதில் உள்ள அனுகூலத்தை அவன் தானாகவே உணர்ந்தாக வேண்டும்.

ஹெம் தன்னைப் பின்தொடர்ந்து வருவதற்கு ஒரு வழித்தடத்தைத் தான் விட்டு வந்திருப்பதை ஹா நினைவுகூர்ந்தான். சுவரில் தான் எழுதி வைத்துள்ள விஷயங்களை ஹெம் படித்தால், அவனால் நிச்சயமாகத் தன் வழியைக் கண்டுபிடிக்க முடியும் என்று ஹா நம்பினான்.

'என்' சீஸ் நிலையத்தின் மிகப் பெரிய சுவர் ஒன்றில், தான் அதுவரை கற்றிருந்த எல்லாவற்றையும் தொகுத்து எழுதினான். அதைச் சுற்றிலும் ஒரு பெரிய சீஸ் படத்தை அவன் வரைந்தான். தான் கற்றுக் கொண்டுள்ள உள்நோக்குகளைப் பார்த்தபோது அவன் புன்னகைத்தான்:

**மாற்றம் நிகழ்கிறது**

சீஸ் நகர்த்தப்பட்டுக் கொண்டே இருக்கிறது

**மாற்றத்தை எதிர்பாருங்கள்**

சீஸ் நகர்த்தப்படலாமென்று எதிர்பார்த்திருங்கள்

**மாற்றத்தைக் கண்காணியுங்கள்**

சீஸை அடிக்கடி முகர்ந்து பாருங்கள்
அப்போதுதான், அது எப்போது
பழையதாகின்றது என்பதை நீங்கள் அறிவீர்கள்

**மாற்றத்திற்கு ஏற்ப உங்களை**

**விரைவாக மாற்றிக் கொள்ளுங்கள்**

பழைய சீஸை நீங்கள் எவ்வளவு வேகமாகத்
தூக்கி எறிகிறீர்களோ, அவ்வளவு விரைவில்
நீங்கள் புதிய சீஸைக் கண்டுபிடிப்பீர்கள்

**மாறுங்கள்**

சீஸோடு சேர்ந்து நீங்களும் நகர்ந்து செல்லுங்கள்

**மாற்றத்தை**

**மகிழ்ச்சியாக அனுபவியுங்கள்**

சாகசப் பயணத்தை அனுபவியுங்கள்.
புதிய சீஸின் சுவையைக் கொண்டாடுங்கள்!

**விரைவாக மாறி,**

**அதை மீண்டும் மீண்டும்**

**அனுபவிப்பதற்குத் தயாராக இருங்கள்**

சீஸ் நகர்த்தப்பட்டுக் கொண்டே இருக்கிறது

'ஸீ' சீஸ் நிலையத்தில் ஹெம்முடன் இருந்ததில் இருந்து தான் வெகுதூரம் வந்திருப்பதை ஹா உணர்ந்தான். ஆனால் மீண்டும் தான் அதிக சௌகரியத்துடன் இருக்கப் பழகிக் கொண்டால், பின்னோக்கிச் செல்வது எளிது என்பதை அவன் அறிந்திருந்தான். எனவே, சீஸின் நிலைமையை அறிந்து கொள்வதற்காக ஒவ்வொரு நாளும் 'என்' சீஸ் நிலையத்தின் நிலைமையை அவன் ஆய்வு செய்தான். எதிர்பாராத மாற்றம் மீண்டும் தன்னை ஆச்சரியத்திற்கு உள்ளாக்குவதைத் தடுப்பதற்காகத் தன்னாலான அனைத்தையும் செய்வதற்கு அவன் தயாராக இருந்தான்.

ஹாவிற்கு இப்போது ஏராளமான சீஸ் இருந்தாலும், தன்னைச் சுற்றி நடப்பவற்றைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காகப் புதிர்க் கட்டத்திற்குள் சென்று, புதிய பகுதிகளைப் பார்வையிட்டான். தனது சௌகரியமான இடத்தில் தனிமையில் ஒதுங்கி இருப்பதைவிட, உண்மையிலேயே தனக்கு இருக்கும் வாய்ப்புகளைப் பற்றி அறிந்து கொள்வது பாதுகாப்பானது என்று அவன் நினைத்தான்.

அப்போது, புதிர்க் கட்டத்தில் ஏதோ ஒன்று நகர்ந்ததால் ஏற்பட்ட ஒரு பெரிய சத்தம் அவன் காதுகளில் விழுந்தது. சத்தம் அதிகமாகிக் கொண்டே வந்தபோது, யாரோ ஒருவர் தான் இருந்த இடத்தை நோக்கி வருவதை அவன் உணர்ந்தான்.

ஒருவேளை ஹெம் வந்துகொண்டு இருக்கிறானோ? இந்தத் தாழ்வாரத்தின் மூலையில் திரும்பிக் கொண்டிருக்கிறானோ?

ஹா ஒரு சிறு பிரார்த்தனை செய்தான். முன்பு பலமுறை செய்துள்ளதுபோல், கடைசியில் ஒருவழியாகத் தன் நண்பன் மாறிவிட்டிருக்கக்கூடும் என்று நம்பினான்.




முற்றும் . . .

அல்லது இது ஒரு புதிய துவக்கமா?

## ஒரு கலந்துரையாடல்

மைக்கேல் அந்தக் கதையைக் கூறி முடித்தபோது, அந்த அறையைச் சுற்றிலும் தன் கண்களை ஓடவிட்டான். தனது முன்னாள் வகுப்புத் தோழர்கள் தன்னைப் பார்த்துப் புன்னகைத்துக் கொண்டிருந்ததைக் கண்டான்.

பலர் அவனிடம் நன்றி தெரிவித்துவிட்டு, அக்கதையிலிருந்து தாங்கள் பெரிதும் பயனடைந்ததாகக் கூறினர்.

நேத்தன் அக்குழுவினரிடம், "சிறிது நேரம் கழித்து நாம் அனைவரும் ஒன்றுகூடி இதைப் பற்றி விவாதிக்கலாமா?" என்று கேட்டான்.

தாங்கள் அதைப் பற்றிப் பேச விரும்புவதாகப் பெரும்பாலானவர்கள் கூறினர். எனவே இரவு உணவிற்கு முன் சந்திப்பதாக அவர்கள் ஏற்பாடு செய்து கொண்டனர்.

அன்று மாலையில் ஹோட்டல் வரவேற்பறையில் அவர்கள் குழுமினர். தங்கள் 'சீஸை'க் கண்டுபிடிப்பது பற்றியும், புதிர்க் கட்டத்தில் தங்களைப் பார்ப்பது பற்றியும் அவர்கள் தங்களுக்குள் வேடிக்கையாகப் பேசிக் கொள்ளத் துவங்கினர்.

அப்போது ஏஞ்சலா அவர்களைப் பார்த்து, "இக்கதையில் வரும் எந்தக் கதாபாத்திரத்தைப் போன்றவர் நீங்கள்? ஸ்னிஃபா, ஸ்கரியா, ஹெம்மா, அல்லது ஹாவா?" என்று கேட்டாள்.

கார்லோஸ் அதற்குப் பதிலளித்தான். "இன்று மதியம் நான் அதைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். விளையாட்டுச் சாதனங்கள் தொடர்பான வியாபாரத்தில் நான் ஈடுபடுவதற்கு முன்பு ஒரு சமயம் ஒரு கடுமையான மாற்றத்தை நான் சந்தித்தது என் நினைவில் உள்ளது.

"நான் ஸ்னிஃபைப்போல் இருக்கவில்லை. சூழ்நிலையை மோப்பம் பிடித்து, மாற்றத்தை நான் முன்னதாகக் கணித்திருக்கவில்லை. அதேபோல நான் ஸ்கரியைப்போல உடனடியாகச் செயலிலும் இறங்கவில்லை.

"நான் பெருமளவில் ஹெம்மைப்போல் இருந்தேன். எனக்குப் பரிச்சயமான எல்லையிலேயே இருக்க விரும்பினேன். உண்மை என்னவென்றால், மாற்றத்தை எதிர்கொள்ள நான் விரும்பவில்லை. அதை நான் பார்க்கக்கூட விரும்பவில்லை."

அதற்கு, “நாம் இங்கு எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம்?” என்று மைக்கேல் கேட்டான்.

“எதிர்பாராமல் நிகழும் வேலை மாற்றம் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறோம்,” என்று கார்லோஸ் பதிலளித்தான்.

“உன்னை வேலையிலிருந்து நீக்கிவிட்டார்களா?” என்று கேட்டுவிட்டு மைக்கேல் சிரித்தான்.

“புதிய சீஸைத் தேடிக் கண்டுபிடிக்க நான் விரும்பவில்லை என்று கூறுவதுதான் சரி. மாற்றம் என் வாழ்வில் ஏன் நிகழாது என்று நான் நம்பியதற்கு ஒரு நல்ல காரணம் இருப்பதாக நான் நினைத்தேன். எனவே, அந்த நேரத்தில் நான் சற்று வருத்தமாக இருந்தேன்.”

ஆரம்பத்தில் அமைதியாக இருந்த அவர்களது முன்னாள் வகுப்புத் தோழர்களில் சிலர் இப்போது சற்று சௌகரியமாக உணரத் துவங்கினர். பிறகு அவர்களும் பேசத் துவங்கினர். இராணுவத்தில் சேர்ந்து பணியாற்றிய ஃபிராங்க்கும் பேசினான்.

“ஹெம்மின் கதாபாத்திரம் எனக்கு என் நண்பன் ஒருவனை நினைவூட்டுகிறது. என் நண்பன் வேலை பார்த்துக் கொண்டிருந்த ஒரு துறை இழுத்து மூடப்பட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அவன் அதைப் பார்க்க விரும்பவில்லை. அவனிடம் வேலை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் இடமாற்றம் செய்யப்பட்டுக் கொண்டிருந்தனர். வளைந்து கொடுத்துச் செல்ல அவன் தயாராக இருந்தால், நிறுவனத்திற்குள்ளேயே பல வாய்ப்புகள் இருந்ததை நாங்கள் அவனுக்குச் சுட்டிக்காட்டினோம். ஆனால் தான் நிச்சயமாக மாறித்தான் ஆக வேண்டும் என்று அவன் நினைக்கவில்லை. ஒருநாள் அவனது துறை இழுத்து மூடப்பட்டபோது அவன் ஒருவன் மட்டுமே அதிர்ச்சியடைந்தான். எந்த மாற்றம் நடக்காது என்று அவன் நினைத்திருந்தானோ அது நடந்துவிட்டது. இப்போது அந்த மாற்றத்திற்கு ஏற்பத் தன்னைப் பொருத்திக் கொள்ள அவன் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருக்கிறான்,” என்று ஃபிராங்க் கூறினான்.

அதைக் கேட்ட ஜெஸிக்கா, “மாற்றம் எனக்கு நிகழும் என்று நானும் நினைத்திருக்கவில்லை. ஆனால் என்னுடைய ‘சீஸ்’ ஒருமுறைக்கு மேல் நகர்த்தப்பட்டு உள்ளது, குறிப்பாக, எனது தனிப்பட்ட வாழ்வில். ஆனால் அதைப் பற்றி நாம் பிறகு பேசலாம்,” என்று கூறினாள்.

நேத்தனைத் தவிர அக்குழுவில் இருந்த மற்ற எல்லோரும் சிரித்தனர்.

"மாற்றம் நம் அனைவருக்கும் நிகழ்கிறது. இதுதான் ஒட்டுமொத்தக் கருத்து," என்று அவன் கூறினான்.

அதோடு, "என் குடும்பத்தினர் இந்த சீஸ் கதையை முன்னரே கேட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். துரதிர்ஷ்டவசமாக, எங்கள் வியாபாரத்தில் வரவிருந்த மாற்றங்களை நாங்கள் பார்க்க விரும்பாமல் எங்கள் கண்களை மூடிக் கொண்டிருந்தோம். ஆனால் இப்போது அதிகத் தாமதமாகிவிட்டது. நாங்கள் எங்களது பல கடைகளை மூட வேண்டியதாயிற்று," என்று நேத்தன் கூறினான்.

குழுவில் இருந்த பலரும் அதைக் கேட்டு ஆச்சரியமடைந்தனர். ஏனெனில், காலாகாலத்திற்கும் சார்ந்திருக்கக்கூடிய ஒரு பாதுகாப்பான வியாபாரத்தில் இருப்பதற்கு நேத்தன் அதிர்ஷ்டம் செய்திருக்க வேண்டும் என்று அவர்கள் நினைத்திருந்தனர்.

"என்ன நிகழந்தது?" ஜெஸிக்கா அதைத் தெரிந்து கொள்ள விரும்பினாள்.

"பல பெரிய அங்காடிகள் வகைவகையான பொருட்களோடும், குறைந்த விலைகளோடும் எங்கள் ஊருக்குள் வந்தபோது, நாங்கள் வைத்திருந்த பல சிறு கடைகள் திடீரென்று பழைய பாணியாகிவிட்டன. எங்களால் அவர்களோடு போட்டியிட முடியவில்லை.

"ஸ்னிஃப் மற்றும் ஸ்கரியைப்போல் இருப்பதற்குப் பதிலாக நாங்கள் ஹெம்மைப்போல் இருந்துள்ளதை நான் இப்போது பார்க்கிறேன். நாங்கள் இருந்த இடத்திலேயே தொடர்ந்து இருந்தோம். நாங்கள் மாற விரும்பவில்லை. எங்களைச் சுற்றி நடந்து கொண்டிருந்த விஷயங்களை நாங்கள் கண்டுகொள்ளாமல் இருந்தோம். அதன் விளைவாக நாங்கள் பிரச்சனையில் ஆழமாகச் சிக்கிக் கொண்டுவிட்டோம். ஹாவிடமிருந்து ஓரிரு பாடங்களை நாங்கள் கற்றுக் கொண்டிருக்கக்கூடும். ஏனெனில், நாங்கள் எங்களைப் பார்த்துச் சிரிக்கவும் இல்லை, நாங்கள் செய்து கொண்டிருந்தவற்றை மாற்றவும் இல்லை."

வியாபார உலகில் ஒரு வெற்றிகரமான பெண்ணாக உருவாகியிருந்த லாரா, இந்த உரையாடலைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் அதுவரை அவள் வெகு குறைவாகவே பேசியிருந்தாள். "நானும்

இன்று மதியம் இந்தக் கதையைப் பற்றி யோசித்தேன். நாம் செய்யும் தவறுகளை அலசுவது, நம்மையே பார்த்துச் சிரித்துக் கொள்வது, மாறுவது, இன்னும் சிறப்பாகச் செயல்படுவது என்று, ஹாவைப்போல் நானும் நடந்து கொள்வது எப்படி என்று யோசித்தேன்," என்று அவள் கூறினாள்.

மேலும், "இங்குள்ளவர்களில் எத்தனை பேர் மாற்றத்தைக் கண்டு பயப்படுகிறீர்கள் என்று தெரிந்து கொள்ள நான் ஆர்வமாக இருக்கிறேன்," என்று அவள் கூறினாள். யாரும் பதில் கூறாததால், "நீங்கள் உங்கள் கையை மட்டும் உயர்த்தினால் போதும்," என்று அவள் அவர்களைக் கேட்டுக் கொண்டாள்.

ஒரே ஒரு கை மட்டும் உயர்ந்தது. "இக்குழுவில் ஒரே ஒரு நேர்மையான மனிதர் மட்டும் இருப்பதுபோல் தோன்றுகிறது. ஒருவேளை எனது அடுத்தக் கேள்வி உங்களுக்குப் பிடித்திருக்கக்கூடும். மாற்றத்தைக் கண்டு மற்றவர்கள் பயப்படுகிறார்கள் என்று எத்தனை பேர் நினைக்கிறீர்கள்?" என்றாள் அவள். எல்லோரும் தங்கள் கைகளை உயர்த்தினர். பிறகு அவர்கள் அனைவரும் சிரிக்கத் துவங்கினர்.

"இது எதை உணர்த்துகிறது?"

"மறுப்பு," என்று நேத்தன் பதிலளித்தான்.

மைக்கேல் அதை ஒப்புக் கொண்டான். "நிச்சயமாக. நாம் பயப்படுகிறோம் என்பது குறித்த விழிப்புணர்வுகூட சில சமயங்களில் நமக்கு இருப்பதில்லை. நான் அப்படித்தான் இருந்தேன். நான் முதலில் இக்கதையைக் கேட்டபோது, அதில் இடம்பெற்றிருந்த 'உனக்கு பயமே இல்லை என்றால் நீ என்ன செய்வாய்?' என்ற கேள்வி எனக்கு மிகவும் பிடித்திருந்தது."

அப்போது ஜெஸிக்கா, "மாற்றம் எல்லா இடங்களிலும் நிகழ்கின்றது. நாம் எவ்வளவு விரைவாக நம்மை அதற்கு ஏற்ப மாற்றிக் கொள்கிறோமோ, நாம் அவ்வளவு சிறப்பாக விளங்குவோம் என்பதுதான் இந்தக் கதையிலிருந்து நான் கற்றுக் கொண்டுள்ள பாடம்," என்று கூறினாள்.

"பல வருடங்களுக்கு முன் எங்கள் நிறுவனம் இருபது புத்தகங்கள் அடங்கிய கலைக்களஞ்சியத்தை விற்றுக் கொண்டிருந்தது. எங்கள்

மொத்தக் கலைக்களஞ்சியத்தையும் ஒரே ஒரு குறுந்தட்டில் பதிவு செய்து குறைந்த விலையில் விற்க வேண்டும் என்று ஒருவர் எங்களிடம் கூறினார். கலைக்களஞ்சியத்தில் கூடுதல் விஷயங்களைச் சேர்ப்பது இதன் மூலம் எளிதாகும் என்றும், இதற்கான உற்பத்திச் செலவும் மிகக் குறைவு என்றும், குறைந்த விலையில் விற்க முடியும் என்பதால் பலரால் அதை வாங்க முடியும் என்றும் அவர் எடுத்துரைத்தார். ஆனால் நாங்கள் அதை எதிர்த்தோம்."

"நீங்கள் ஏன் அதை எதிர்த்தீர்கள்?" என்று நேத்தன் கேட்டான்.

"ஏனெனில், வீடுவீடாகச் சென்று மக்களைச் சந்தித்து, நேரடியாக அவர்களிடம் எங்கள் கலைக்களஞ்சியத்தை விற்பனை செய்யும் விற்பனைக் குழுவினர்தான் எங்கள் வியாபாரத்தின் முதுகெலும்பு என்று நாங்கள் நம்பினோம். அதிக விலை கொண்ட எங்கள் பொருட்களை விற்பதிலிருந்து அவர்களுக்குக் கிடைத்தப் பெரிய கமிஷன் தொகைதான் அவர்களை ஊக்குவித்து வந்தது. நாங்கள் நெடுங்காலமாக இதை வெற்றிகரமாகச் செய்து வந்திருந்தோம். எனவே இது எப்போதும் தொடர்ந்து வெற்றி பெறும் என்று நாங்கள் நினைத்திருந்தோம்."

அதற்கு லாரா, "கதையில் ஹெம் மற்றும் ஹாவின் வெற்றி குறித்த அகங்காரத்தைப் பற்றிக் கூறுகையில், இதைத்தான் சுட்டிக்காட்டி இருந்தார்கள்போல் உள்ளது. ஒரு சமயத்தில் சிறப்பாக வேலை செய்த ஓர் உத்தி மாற்றப்பட வேண்டிய நேரம் வந்துவிட்டது என்பதை அவர்கள் கவனிக்கவில்லை," என்று கூறினாள்.

"உங்களது பழைய சீஸ் மட்டுமே உங்களுக்கான ஒரே சீஸ் என்று நீங்கள் நினைத்தீர்கள், அப்படித்தானே?" என்று நேத்தன் கேட்டான்.

"ஆம். அதோடு நாங்கள் அதையே பற்றிக் கொண்டிருக்க விரும்பினோம்.

"எங்களுக்கு ஏற்பட்ட சூழ்நிலையை நான் இப்போது நினைத்துப் பார்க்கும்போது, எனக்கு மற்றொன்றும் தெளிவாகப் புரிகிறது. எங்கள் சீஸ் நகர்த்தப்பட்டதோடு விஷயம் முடிந்துவிடவில்லை. சீஸிற்கு என்று ஒரு வாழ்நாள் இருக்கிறது, இறுதியில் அது மறைந்துவிடும் என்ற கோணத்திலும் நான் பார்க்கிறேன்.

“எது எப்படியோ, நாங்கள் மாறாதிருந்தபோது எங்கள் போட்டியாளர்களில் ஒருவர் மாறியிருந்தார். அதன் காரணமாக எங்கள் விற்பனை மிக மோசமான சரிவைச் சந்தித்தது. நாங்கள் ஒரு கடினமான சூழ்நிலையைச் சந்தித்துக் கொண்டிருந்தோம். இப்போது இன்னொரு பெரிய தொழில்நுட்ப மாற்றம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் அதைக் கையாள்வதற்கு எங்கள் நிறுவனத்தில் உள்ள எவருக்கும் விருப்பம் இல்லை என்பதுபோல் தோன்றுகிறது. எங்கள் நிறுவனத்தின் நிலைமை அவ்வளவு சிறப்பாக இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. கூடிய விரைவில் என் வேலை போய்விடும் என்று நான் நினைக்கிறேன்.”

“இது புதிர்க் கட்டத்திற்கான நேரம்!” என்று கார்லோஸ் கத்தினான். ஜெஸிக்கா உட்பட அனைவரும் சிரித்தனர்.

கார்லோஸ் ஜெஸிக்காவைத் திரும்பிப் பார்த்து, “நீ உன்னைப் பார்த்துச் சிரிப்பது நல்ல விஷயம்தான்,” என்று கூறினான்.

அதற்கு ஃபிராங்க், “அக்கதையிலிருந்து நான் அதைத்தான் தெரிந்து கொண்டேன். நான் எப்போதும் என்னை மிகவும் தீவிரமாக எடுத்துக் கொள்ளும் போக்கைக் கொண்டவன். எப்போது தன்னைப் பார்த்தும், தான் செய்யும் விஷயங்களைப் பார்த்தும் ஹாவால் சிரிக்க முடிந்ததோ, அப்போதுதான் அவன் மாறினான் என்பதை நான் கவனித்தேன்,” என்று கூறினான்.

“ஹெம் தன்னை மாற்றிக் கொண்டு புதிய சீஸைக் கண்டுபிடித்திருப்பான் என்று நினைக்கிறீர்களா?” என்று ஏஞ்சலா கேட்டாள்.

“அவன் கண்டிப்பாக மாறியிருப்பான் என்று நான் நினைக்கிறேன்,” என்று எலெய்ன் கூறினாள்.

“இல்லை, நான் அப்படி நினைக்கவில்லை. சிலர் ஒருபோதும் மாறுவதில்லை. இறுதியில் அதற்கான விலையை அவர்கள் கொடுக்கின்றனர். என் மருத்துவத் தொழிலில் ஹெம் போன்ற மனிதர்களை நான் பார்க்கிறேன். தங்கள் ‘சீஸ்’ தங்களுக்கு உரிமையானது என்று அவர்கள் நினைக்கின்றனர். அது அவர்களிடம் இருந்து எடுத்துக் கொள்ளப்படும்போது அவர்கள் பலிகடாக்களைப்போல் உணர்கின்றனர், பிறரைக் குறை கூறுகின்றனர். எல்லாவற்றையும் மறந்துவிட்டு முன்னோக்கிச் செல்லும் மக்களைவிட அவர்கள் அதிகமாக நோய்வாய்ப்படுகின்றனர்,” என்று கோரி கூறினாள்.

அப்போது நேத்தன் அமைதியாக, " 'நாம் எதை விட்டுவிட வேண்டும், எதை நோக்கிச் செல்ல வேண்டும்' என்பதுதான் கேள்வி என்று நான் நினைக்கிறேன்," என்று தனக்குள் பேசிக் கொள்வதுபோல் கூறினான்.

சற்று நேரம் யாரும் எதுவும் கூறவில்லை.

"நாட்டின் பிற பகுதிகளில் உள்ள எங்களைப் போன்ற கடைகளுக்கு என்ன நிகழ்ந்து கொண்டிருந்தது என்பதை நான் பார்த்தேன் என்பதை நான் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆனால் அது எங்கள் கடைகளைப் பாதிக்காது என்று நான் நம்பினேன். நம்மால் முடிந்தபோது நாமாகவே ஒரு மாற்றத்தைத் தூண்டுவது, அந்த மாற்றம் ஏற்பட்டவுடன் அதற்கேற்ப நம்மை மாற்றிக் கொள்ள முயற்சிப்பதைவிடச் சிறப்பானது என்று நான் நினைக்கிறேன். நம் சொந்த சீஸை நாமே நகர்த்த வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது," என்று நேத்தன் கூறினான்.

"நீ என்ன கூறுகிறாய்?" என்று ஃபிராங்க் கேட்டான்.

அதற்கு நேத்தன், "சிறந்த அங்காடிகளுடன் போட்டியிடுவதற்கு ஏதுவாக, எங்கள் பழைய கடைகள் அனைத்தையும் விற்றுவிட்டு, அதில் கிடைத்தப் பணத்தைக் கொண்டு ஒரு பெரிய நவீன அங்காடியை உருவாக்கியிருந்தால், நாங்கள் இன்று எவ்வளவு உயர்ந்த நிலையில் இருந்திருப்போம் என்று நினைத்து வியக்கிறேன்," என்று பதிலளித்தான்.

" 'சாகசப் பயணத்தை அனுபவியுங்கள். சீஸோடு சேர்ந்து நகர்ந்து செல்லுங்கள்' என்று சுவரில் எழுதியபோது, ஹா இதைத்தான் நினைத்தான்போலும்," என்று லாரா கூறினாள்.

"சில விஷயங்கள் மாறாமல் இருப்பது நல்லது என்று நினைப்பவன் நான். எடுத்துக்காட்டாக, என் அடிப்படை மதிப்பீடுகளை நான் எப்போதும் உறுதியாகப் பற்றிக் கொள்ள விரும்புகிறேன். ஆனால் என் வாழ்வில் முன்னதாகவே அந்த 'சீஸுடன்' சேர்ந்து நானும் நகர்ந்திருந்தால் என் நிலைமை இன்று இன்னும் சிறப்பாக இருந்திருக்கும் என்பதை நான் இப்போது உணர்கிறேன்," என்று ஃபிராங்க் கூறினான்.

வகுப்பில் எப்போதும் சந்தேகப் பிராணியாக இருந்த ரிச்சர்டு, "அது சரி, மைக்கேல், நீ கூறியது ஓர் அருமையான, சிறிய கதை என்பதில் சந்தேகமில்லை. ஆனால் உண்மையில் அதை நீ உன் நிறுவனத்தில் எப்படிப் பயன்படுத்தினாய்?" என்று கேட்டான்.

ரிச்சர்டு சில மாற்றங்களை அனுபவித்துக் கொண்டிருந்ததை அக்குழுவில் உள்ள ஒருவரும் அறிந்திருக்கவில்லை. சமீபத்தில் விவாகரத்தாகியிருந்த அவன், வயதுக்கு வந்த தன் பிள்ளைகளை வளர்ப்பதையும் தன் வேலையையும் சமநிலையில் வைத்துக் கொள்ள முயற்சித்துக் கொண்டிருந்தான்.

அதற்கு மைக்கேல் இவ்வாறு பதிலளித்தான்: "அன்றாடப் பிரச்சனைகளைச் சமாளிப்பதுதான் என் வேலை என்று நான் நினைத்திருந்தேன். ஆனால், சூழ்நிலையை முன்னோக்கிப் பார்த்து, நாங்கள் எங்கே சென்று கொண்டிருந்தோம் என்பதை நான் கவனித்திருக்க வேண்டும்.

"நான் தினமும் இருபத்து நான்கு மணிநேரமும் பிரச்சனைகளைச் சமாளித்து வந்தது என்னவோ உண்மைதான். மக்கள் என்னிடம் நெருங்கவே பயந்தனர். நான் ஒரு பந்தயத்தில் ஓடிக் கொண்டிருந்ததுபோல் நடந்து கொண்டேன். அதிலிருந்து என்னால் வெளியேறவும் முடியவில்லை."

"அப்படியானால், நீ முன்னடத்திச் செல்ல வேண்டிய நேரத்தில் வெறுமனே சமாளித்துக் கொண்டிருந்தாய், அப்படித்தானே?" என்று லாரா கேட்டாள்.

"மிகவும் சரியாகக் கூறியுள்ளாய். அப்போதுதான் நான் இக்கதையைக் கேட்டேன். வாழ்க்கையானாலும் சரி, வேலையானாலும் சரி, தங்களை மாற்றிக் கொண்டு வெற்றி பெறும் வண்ணம், அனைவரும் விருப்பத்துடன் பின்தொடரக்கூடிய 'புதிய சீஸை'ப் பற்றிய ஒரு காட்சியை அவர்கள்முன் தீட்டுவதுதான் என் வேலை என்பதை நான் உணர்ந்தேன்," என்று மைக்கேல் கூறினான்.

அதற்கு நேத்தன், "உன் நிறுவனத்தில் நீ என்ன செய்தாய்?" என்று கேட்டான்.

"கதையில் வரும் எந்தக் கதாபாத்திரமாக அவர்கள் தங்களைப் பார்க்கிறார்கள் என்று என் நிறுவனத்தில் வேலை பார்த்தவர்களிடம் நான் கேட்டபோது, அந்த நான்கு கதாபாத்திரங்கள் ஒவ்வொன்றும் எங்கள் நிறுவனத்தில் இருந்ததை நான் கண்டேன். எங்கள் நிறுவனத்தில் இருந்த ஸ்னிஃப்களையும், ஸ்கரிகளையும், ஹெம்களையும், ஹாக்களையும்

வெவ்வேறு விதமாக நடத்த வேண்டும் என்பதை நான் உணரத் துவங்கினேன்.

“எங்களிடம் இருந்த ஸ்னிஃப்கள் சந்தை நிலவரங்களை மோப்பம் பிடித்ததால், எங்கள் நிறுவனத்தின் முன்னோக்குத் திட்டத்திற்கு அவை உதவின. வரவிருந்த மாற்றங்கள் எங்கள் வாடிக்கையாளர்கள் விரும்பும் புதிய பொருட்களையும் சேவைகளையும் உருவாக்க எவ்வாறு உதவும் என்பதைக் கண்டுபிடிக்குமாறு அவர்கள் ஊக்குவிக்கப்பட்டனர். எங்கள் ஸ்னிஃப்களுக்கு அந்த வேலை மிகவும் பிடித்திருந்தது. மாற்றத்தை அடையாளம் கண்டுகொண்டு, குறித்த நேரத்தில் அதற்கேற்பத் தன்னை மாற்றிக் கொள்ளும் ஒரு நிறுவனத்தில் வேலை செய்வதைத் தாங்கள் மகிழ்ச்சியுடன் அனுபவிப்பதாக அவர்கள் எங்களிடம் கூறினர்.

“எங்களிடம் இருந்த ஸ்கரிகளுக்கு வேலைகளை நிறைவேற்றுவதில் அதிக நாட்டம் இருந்தது. எனவே, நிறுவனத்தின் புதிய முன்னோக்குத் திட்டத்தின் அடிப்படையில் நடவடிக்கைகள் எடுப்பதற்கு அவர்களை நாங்கள் ஊக்குவித்தோம். பிறகு புதிய சீஸை அவர்கள் கொண்டுவந்தபோது நாங்கள் அவர்களுக்கு வெகுமதி வழங்கினோம். செயல்பாட்டையும் விளைவுகளையும் மதிக்கும் ஒரு நிறுவனத்தில் வேலை பார்ப்பதை அவர்கள் விரும்பினார்கள்.”

“உங்கள் நிறுவனத்தில் இருந்த ஹெம்களும் ஹாக்களும் என்னவானார்கள்?” என்று ஏஞ்சலா கேட்டாள்.

“துரதிர்ஷ்டவசமாக, எங்களிடம் வேலை பார்த்த ஹெம்கள், காலில் கட்டப்பட்ட கனத்த சங்கிலியாய் மாறி எங்கள் வளர்ச்சியைத் தாமதப்படுத்தினர். அவர்களில் சிலர் தங்களுடைய பழைய நிலையில் சௌகரியமாக இருந்தனர். வேறு சிலர் மாறுவதற்குப் பயந்தனர். மாறுவது எப்படி அவர்களுக்கு அனுகூலமாக அமையும் என்பது குறித்து நாங்கள் எடுத்துரைத்த விளக்கங்களைக் கண்டபோதுதான் அவர்களில் சிலர் மாறினர்.

“பாதுகாப்பான இடத்தில் வேலை செய்வதில்தான் தங்களுக்கு விருப்பம் என்றும், எனவே அந்த மாற்றம் தங்களுடைய பாதுகாப்பு உணர்வை அதிகரிப்பதாக இருக்க வேண்டும் என்றும் அவர்கள் எங்களிடம் கூறினர். ஆனால் மாறாமல் இருப்பதால் ஏற்படும் உண்மையான ஆபத்தை அவர்கள் உணர்ந்தபோது, அவர்களில் சிலர் மாறினார்கள், சிறப்பாகவும்

செயல்பட்டார்கள். எங்கள் நிறுவனத்தின் முன்னோக்குத் திட்டம், பல ஹெம்களை ஹாக்களாக மாற்ற உதவியது."

"மாற விருப்பமில்லாத ஹெம்களை நீங்கள் என்ன செய்தீர்கள்?" ஃபிராங்க் அதைத் தெரிந்து கொள்ள விரும்பினான்.

மைக்கேல் வருத்தத்துடன், "அவர்களை நாங்கள் வேலையில் இருந்து நீக்க வேண்டியதாயிற்று. எங்களது அனைத்து ஊழியர்களையும் நாங்கள் தக்க வைத்துக் கொள்ள விரும்பினோம். ஆனால் எங்கள் வியாபாரத்தில் விரைவில் மாற்றத்தைக் கொண்டுவராவிட்டால் நாங்கள் அனைவரும் பிரச்சனைக்கு உள்ளாவோம் என்பதை நாங்கள் அறிந்திருந்தோம்," என்று கூறினான்.

மேலும் அவன் தொடர்ந்து கூறினான்: "இதில் நல்ல விஷயம் என்னவென்றால், முதலில் தயங்கிய ஹாக்கள், பின்னர் புதிய விஷயங்களைக் கற்றுக் கொள்வதற்கும், வித்தியாசமாக நடந்து கொள்வதற்கும், நாங்கள் வெற்றி பெறுவதற்கு உதவும் விதத்தில் குறித்த நேரத்தில் தங்களை மாற்றிக் கொள்வதற்கும் தயாராக இருந்தனர்.

"மாற்றத்தை எதிர்பார்க்க அவர்கள் கற்றுக் கொண்டனர். மனித இயல்பைப் பற்றி அவர்கள் புரிந்து வைத்திருந்ததால், எல்லோருக்கும் அர்த்தமுள்ளதாக அமையும் விதத்தில் புதிய சீஸ் குறித்த ஒரு யதார்த்தமான முன்னோக்குத் திட்டத்தைத் தீட்டுவதற்கு அவர்கள் எங்களுக்கு உதவினர்.

"மாறுவதற்குத் தேவையான நம்பிக்கையையும் அதற்கான கருவிகளையும் கொடுத்து உதவுகின்ற ஒரு நிறுவனத்தில் தாங்கள் வேலை பார்க்க விரும்புவதாக அவர்கள் எங்களிடம் கூறினர். புதிய சீஸ் குறித்த எங்கள் தேடலில் எங்கள் நகைச்சுவை உணர்வைத் தக்க வைத்துக் கொள்ள அவர்கள் எங்களுக்கு உதவினர்."

அதைக் கேட்ட ரிச்சர்டு, "ஒரு சிறிய கதையிலிருந்தா உனக்கு இவ்வளவு விஷயங்களும் கிடைத்தன?" என்று கேட்டான்.

மைக்கேல் புன்னகைத்தவாறு, "கதை இங்கு எந்த விளைவையும் ஏற்படுத்தவில்லை. அந்தக் கதையில் இருந்து நாங்கள் கற்றுக் கொண்ட பாடங்களின் அடிப்படையில் நாங்கள் மேற்கொண்ட வித்தியாசமான நடவடிக்கைகள்தான் அதற்குக் காரணம்," என்று கூறினான்.

ஏஞ்சலாவும், "நான் ஓரளவுக்கு ஹெம்மைப் போன்றவள். ஹா தன் பயத்தைக் கண்டு சிரித்து, புதிய சீஸைத் தான் அனுபவிப்பது போன்ற ஒரு காட்சியைத் தன் மனத்தில் தீட்டியதுதான் கதையின் மிகவும் சக்திவாய்ந்த பகுதி என்று நான் கருதுகிறேன். புதிர்க் கட்டத்திற்குள் செல்வது அவ்வளவு அச்சுறுத்துவதாக இல்லாமல், அதிக மகிழ்ச்சியாக அமைந்ததற்கு அதுதான் காரணம். இறுதியில் ஹாவிற்கு நன்மையே ஏற்பட்டது. நானும் அதைத்தான் அடிக்கடி செய்ய விரும்புகிறேன்," என்று ஒப்புக் கொண்டாள்.

ஃபிராங்க் முறைத்துப் பார்த்தான். "மாறுவதில் உள்ள அனுகூலத்தைச் சமயங்களில் ஹெம்களாலும் பார்க்க முடிகிறது, அப்படித்தானே?"

"தங்கள் வேலையை எப்படித் தக்கவைத்துக் கொள்ளலாம் என்பது குறித்து அறிந்து கொள்வதைக் குறிப்பிடலாம்," என்று கூறி, கார்லோஸ் சிரித்தான்.

"அல்லது ஒரு நல்ல சம்பள உயர்வை எப்படிப் பெறலாம் என்பதாகவும் இருக்கலாம்," என்று ஏஞ்சலா கூறினாள்.

இந்த உரையாடலைக் கவலையோடு கேட்டுக் கொண்டிருந்த ரிச்சர்டு, "எங்கள் நிறுவனம் மாற வேண்டும் என்று எங்கள் மேலாளர் கூறுகிறார். நான் மாற வேண்டும் என்று மறைமுகமாக அவர் என்னிடம் கூறுகிறார் என்று நான் நினைக்கிறேன். ஆனால் அதைக் கேட்பதில் எனக்கு விருப்பம் இருக்கவில்லை. எந்தப் 'புதிய சீஸை' நோக்கி அவர் எங்களை நகர்த்த முயற்சித்துக் கொண்டிருந்தார் என்பதையும், அல்லது அதிலிருந்து எனக்கு என்ன ஆதாயம் கிடைக்கும் என்பதையும் நான் அறிந்திருக்கவில்லை என்று நான் நினைக்கிறேன்," என்று கூறினான்.

இதைக் கூறியபோது ரிச்சர்டின் முகத்தில் ஒரு லேசான புன்னகை அரும்பியது. 'புதிய சீஸை'ப் பார்த்து, அதை அனுபவிப்பதுபோல் கற்பனை செய்யும் யோசனை எனக்குப் பிடித்துள்ளது என்பதை நான் ஒப்புக் கொள்ள வேண்டும். அது எல்லாவற்றையும் லேசாக்குகிறது. மாற்றம் எப்படி எல்லாவற்றையும் மேம்படுத்துகிறது என்பதை நீங்கள் பார்க்கும்போது, அந்த மாற்றத்தை நிகழச் செய்வதற்கு நீங்கள் அதிக ஆர்வம் காட்டுவீர்கள்.

"இதை என் தனிப்பட்ட வாழ்க்கையில் என்னால் பயன்படுத்த முடியும் என்று நான் நினைக்கிறேன். தங்கள் வாழ்வில் உள்ள எதுவும்

மாறக்கூடாது என்று என் குழந்தைகள் நினைக்கின்றனர். ஹெம்மைப்போல் அவர்கள் நடந்து கொள்கிறார்கள் என்பது என் ஊகம். அவர்கள் கோபப்படுகின்றனர். தங்கள் எதிர்காலம் எப்படி அமையும் என்பது குறித்து அவர்கள் பயப்படுவதுபோல் தெரிகிறது. 'புதிய சீஸ்' பற்றிய ஒரு யதார்த்தமான காட்சியை நான் அவர்களுக்குக் காட்டவில்லை என்று நினைக்கிறேன். அதற்குக் காரணம், அப்படிப்பட்ட ஒரு யதார்த்தமான காட்சியை நானே இன்னும் காட்சிப்படுத்திப் பார்க்கவில்லை என்பதால் இருக்கலாம்."

தங்கள் சொந்த வாழ்வைப் பற்றி அக்குழுவிலிருந்த பலர் நினைத்துப் பார்த்துக் கொண்டிருந்ததால், ஒட்டுமொத்தக் குழுவும் அமைதியாக இருந்தது.

"இக்குழுவில் உள்ள பெரும்பாலானவர்கள் வேலையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். ஆனால், இந்தக் கதையை நான் கவனித்துக் கேட்டபோது, என் தனிப்பட்ட வாழ்க்கையைப் பற்றி நான் நினைத்துப் பார்த்தேன். எனது தற்போதைய உறவானது, பூஞ்சைக் காளான் பூத்துள்ள 'பழைய சீஸ்' போல உள்ளது என்று நான் நினைக்கிறேன்," என்று ஜெஸிக்கா கூறினாள்.

அதை ஒப்புக் கொண்ட கோரி சிரித்தாள். "என் நிலைமையும் அதுதான். ஒரு மோசமான உறவை விட்டுத்தள்ள வேண்டிய நிலையில் நான் இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது."

ஏஞ்சலா இதில் குறுக்கிட்டாள். "அல்லது, 'பழைய சீஸ்' என்பது பழைய நடத்தையாக இருக்கலாம். நாம் உண்மையிலேயே விட்டுத்தள்ள வேண்டிய விஷயம், நம் மோசமான உறவுகளுக்கு மூல காரணமாக விளங்கும் நடத்தையைத்தான். பிறகு, நாம் நல்லவிதமாகச் சிந்திக்கவும் நடந்து கொள்ளவும் வேண்டும்," என்று அவள் கூறினாள்.

"நீ கூறும் கருத்தில் நியாயம் உள்ளது. புதிய சீஸ் என்பது அதே நபருடனான ஒரு புதிய உறவுதான்," என்று கோரி கூறினாள்.

"நான் நினைத்ததைவிட இதில் இன்னும் அதிக விஷயங்கள் இருப்பதாக எனக்குத் தோன்ற ஆரம்பித்துள்ளது. பழைய உறவை ஒதுக்கித் தள்ளுவதைவிட, பழைய நடத்தையை ஒதுக்கித் தள்ளும் யோசனை எனக்குப் பிடித்திருக்கிறது. தொடர்ந்து அதேபோல் நடந்து கொள்வது அதே விளைவைத்தான் பெற்றுத் தரும்," என்று ரிச்சர்டு கூறினான்.

மேலும் அவன், “வேலையைப் பொறுத்தவரை, வேலைகளை மாற்றுவதைவிட, வேலை செய்யும் விதத்தை மாற்ற வேண்டும் என்று நான் நினைக்கிறேன். அப்படிச் செய்திருந்தால், இந்நேரம் நான் ஒரு நல்ல நிலையில் இருந்திருப்பேன்,” என்று கூறினான்.

“இந்தக் கதையையும், இங்கு பேசியவர்களின் கருத்துக்களையும் கேட்டப் பிறகு, நான் என்னைப் பார்த்து சிரிக்கக் கற்றுக் கொண்டேன். மாற்றத்தைக் கண்டு பயந்து, நெடுங்காலமாக நான் ஹெம்மைப்போல் புலம்பிக் கொண்டும் கோபப்பட்டுக் கொண்டும் இருந்து வந்துள்ளேன். நான் இந்த மனப்போக்கை என்னையும் அறியாமல் என் குழந்தைகளுக்குப் பழக்கப்படுத்தி விட்டேன் என்று நினைக்கிறேன்,” என்று பெக்கி கூறினாள்.

அவள் மேலும் தொடர்ந்தாள். “நான் இப்போது அதைப் பற்றி நினைத்துப் பார்க்கும்போது, மாற்றம் என்பது ஒரு புதிய, சிறப்பான இடத்திற்கு இட்டுச் செல்லக்கூடும் என்பதை உணர்கிறேன். ஆனால் துவக்கத்தில் நம்மால் அப்படி நினைக்க முடிவதில்லை.

“என் மகன் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த சமயத்தில் எங்கள் ஊரில் நிகழ்ந்த ஒரு மாற்றம் என் நினைவிற்கு வருகிறது. என் கணவரின் வேலை காரணமாக நாங்கள் இல்லினாய் மாநிலத்திலிருந்து வெர்மான்ட் மாநிலத்திற்கு இடம்பெயர வேண்டியதாயிற்று. தன் நண்பர்களை விட்டுவிட்டு வர வேண்டியிருந்தது குறித்து என் மகன் மிகவும் வருத்தப்பட்டான். அவன் ஒரு சிறந்த நீச்சல் வீரன். ஆனால், வெர்மான்ட்டில் இருந்த உயர்நிலைப் பள்ளியில் நீச்சல் குழு இருக்கவில்லை. எனவே, தன்னை எங்களோடு கூட்டிச் செல்வதற்காக அவன் எங்கள்மீது கோபப்பட்டான்.

“ஆனால் நாங்கள் வெர்மான்ட்டிற்குக் குடிபெயர்ந்தவுடன், அங்கிருந்த மலைகள் அவன் மனத்தைக் கவர்ந்தன. பனிச்சறுக்கு விளையாட்டில் அவன் கலந்து கொண்டு, பின் அதில் பயிற்சியும் பெற்றுத் தன் கல்லூரிக் குழுவில் இடம் பெற்றான். இன்று கொலராடோவில் அவன் மகிழ்ச்சியாக வாழ்ந்து வருகிறான்.

“நாம் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோதே, ஒரு கோப்பை ‘ஹாட் சாக்லேட்’ பானத்தைப் பருகியவாறு இந்த சீஸ் கதையைக் கேட்டிருந்தால்,

நம் குடும்பத்தினருக்கு ஏற்பட்ட ஏராளமான மன அழுத்தத்தை அது தவிர்த்திருக்கும்."

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஜெஸிக்கா, "நான் என் வீட்டிற்குச் சென்று என் குடும்பத்தாரிடம் இக்கதையைக் கூறப் போகிறேன். இந்தக் கதையில் வரும் நான்கு கதாபாத்திரங்களான ஸ்னிஃப், ஸ்கரி, ஹெம், ஹா ஆகியோரில், நான் எந்தக் கதாபாத்திரம் என்று என் குழந்தைகள் நினைக்கிறார்கள் என்று நான் அவர்களிடம் கேட்கப் போகிறேன். பிறகு அவர்கள் எந்தக் கதாபாத்திரமாகத் தங்களைக் கருதுகிறார்கள் என்றும் கேட்கப் போகிறேன். எங்கள் குடும்பத்தின் பழைய சீஸ் எது என்று நாங்கள் நினைக்கிறோம் என்பது பற்றியும், புதிய சீஸ் எதுவாக இருக்கலாம் என்பது பற்றியும் நாங்கள் பேசலாம்," என்று கூறினாள்.

"இது நல்ல யோசனை," என்று ரிச்சர்டு கூறியது அனைவருக்கும் ஆச்சரியமளித்தது. அது அவனுக்கே ஆச்சரியமூட்டியது.

அப்போது ஃபிராங்க், "நான் ஹாவைப்போல் நடந்து கொள்ளப் போகிறேன். சீஸோடு சேர்ந்து நகர்ந்து, அதை அனுபவிக்கப் போகிறேன். இராணுவத்தில் இருந்து வெளியேறுவதற்காகக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் என் நண்பர்களிடத்தில் நான் இக்கதையைக் கூறப் போகிறேன். மாற்றம் அவர்களுக்கு எவ்வாறு நன்மை பயக்கக்கூடும் என்பதை எடுத்துக் கூறப் போகிறேன். அது சில சுவாரசியமான உரையாடல்களுக்கு வழிவகுக்கக்கூடும்," என்று கூறினான்.

இதைக் கேட்ட மைக்கேல், "எங்கள் வியாபாரத்தை நாங்கள் அவ்வாறுதான் மேம்படுத்தினோம். சீஸ் கதையிலிருந்து நாங்கள் கற்றுக் கொண்டவற்றைப் பற்றியும், அவற்றை எவ்வாறு எங்கள் சூழ்நிலைக்கு ஏற்ப நடைமுறைப்படுத்தலாம் என்பது பற்றியும் நாங்கள் பல கலந்துரையாடல்களில் ஈடுபட்டோம்," என்று கூறினான்.

அவன் மேலும் தொடர்ந்து, "மாற்றத்தை நாங்கள் எவ்வாறு கையாள்கிறோம் என்பதைப் பற்றிப் பேசுவதற்கு வேடிக்கையான இந்த 'சீஸ்' மொழியை நாங்கள் பயன்படுத்தியது எங்கள் உரையாடல்களைச் சிறப்பாக ஆக்கியது. அது நல்ல பலனளித்தது. குறிப்பாக அது எங்கள் நிறுவனத்திற்குள் ஆழமாக ஊடுருவியபோது, அது மிகவும் பலன் தருவதாக அமைந்தது," என்று கூறினான்.

“ ‘ஆழமாக ஊடுருவியபோது’ என்று குறிப்பிட்டாயே, அப்படியென்றால்?” என்று நேத்தன் கேட்டான்.

“நாங்கள் எங்கள் நிறுவனத்தினுள் ஆழமாக ஊடுருவிப் பார்த்தபோது, தங்களுக்குப் போதுமான அதிகாரம் இருக்கவில்லை என்று உணர்ந்த அதிகமான ஊழியர்களை நாங்கள் அடையாளம் கண்டோம். மேலிருந்து கட்டாயமாக அமல்படுத்தப்படும் மாற்றம் தங்களுக்கு எத்தகைய பாதிப்பை ஏற்படுத்தக்கூடும் என்பதை நினைத்து அவர்கள் கொண்டிருந்த பயத்தை எங்களால் புரிந்து கொள்ள முடிந்தது. எனவே அவர்கள் மாற்றத்தை எதிர்த்தனர்.

“சுருக்கமாகக் கூறினால், கட்டாயமாகத் திணிக்கப்படும் மாற்றம் நிச்சயமாக எதிர்க்கப்படும்.

“ஆனால் இந்த சீஸ் கதையை நாங்கள் எங்கள் நிறுவனத்தில் இருந்த ஒவ்வொருவரிடமும் பகிர்ந்து கொண்டபோது, மாற்றம் குறித்து அவர்கள் கொண்டிருந்த கண்ணோட்டத்தை மாற்றுவதற்கு அது உதவியது. அவர்கள் தங்களுடைய பழைய பயங்களைப் பார்த்துச் சிரித்து, குறைந்தபட்சம் புன்னகை பூத்து, தொடர்ந்து நகர்ந்து செல்ல முற்பட்டனர்.

“சீஸ் கதையை இன்னும் முன்னதாகவே கேட்டிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும் என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது,” என்று மைக்கேல் கூறினான்.

“ஏன் எப்படி?” என்று கார்லோஸ் கேட்டான்.

“ஏனெனில், மாற்றங்களைப் பற்றி நாங்கள் எங்கள் ஊழியர்களிடம் பேசும் வேளை வந்தபோது, எங்கள் வியாபாரம் ஏற்கனவே மிக மோசமான நிலையை எட்டியிருந்தது. அதனால் பலரை நாங்கள் வேலையைவிட்டு நீக்க வேண்டியதாயிற்று. நான் முன்பே கூறியதுபோல், வேலையிலிருந்து நீக்கப்பட்டவர்களில் சில நண்பர்களும் அடங்குவர். அது எங்கள் அனைவருக்குமே கடினமாக இருந்தது. ஆனாலும், விஷயங்களை வித்தியாசமான கண்ணோட்டத்தில் பார்ப்பதற்கும், இறுதியில் அவற்றைச் சிறப்பாகக் கையாள்வதற்கும் சீஸ் கதை உதவியதாக, தொடர்ந்து எங்களிடம் வேலை பார்த்தவர்களும், வேலை நீக்கம் செய்யப்பட்டவர்களில் பெரும்பாலானவர்களும் எங்களிடம் கூறினர்.

“வேலை நீக்கம் செய்யப்பட்டுப் புதிய வேலை தேடியவர்களுக்கு அது முதலில் கடினமாக இருந்ததாகவும், ஆனால் சீஸ் கதையை நினைவுபடுத்திப் பார்த்தது தங்களுக்கு உதவியாக இருந்ததாகவும் கூறினர்.”

“எது அவர்களுக்கு மிகவும் உதவியது?” என்று ஏஞ்சலா கேட்டாள்.

“புதிய சீஸானது, தாங்கள் கண்டுபிடிப்பதற்காக வெளியில் எங்கோ காத்திருந்ததைத் தாங்கள் உணர்ந்ததாக, தங்கள் பயங்களைக் கடந்து வந்த பிறகு அவர்கள் என்னிடம் கூறினர்,” என்று மைக்கேல் பதிலளித்தான்.

“புதிய சீஸ் பற்றிய ஒரு படத்தைத் தங்கள் மனத்தில் நிலைநிறுத்தி, ஒரு புதிய வேலையில் தாங்கள் சிறப்பாகச் செயல்படுவதுபோல் கற்பனை செய்தது தங்களைச் சிறப்பாக உணரச் செய்ததாகவும், வேலைக்கான நேர்முகத் தேர்வுகளில் தாங்கள் சிறப்பாகச் செய்வதற்கு உதவியதாகவும் அவர்கள் கூறினர். அவர்களில் பலருக்கு நல்ல வேலை கிடைத்தது.”

“உங்களிடம் தொடர்ந்து வேலை பார்த்தவர்கள் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?” என்று லாரா கேட்டாள்.

அதற்கு மைக்கேல் இவ்வாறு பதிலளித்தான். “நிகழ்ந்து கொண்டிருந்த மாற்றங்களைப் பற்றிக் குறைகூறுவதற்குப் பதிலாக, அவர்கள் இப்போது, ‘நமது சீஸ் நகர்த்தப்பட்டுள்ளது. நாம் புதிய சீஸைத் தேடுவோம்,’ என்று கூறுகின்றனர். அது எங்களுக்கு ஏகப்பட்ட நேரத்தை மிச்சப்படுத்தியதோடு, மன அழுத்தத்தையும் குறைத்தது.

“முன்பு மாற்றத்தை எதிர்த்தவர்கள், விரைவில் அதன் அனுகூலத்தைக் காணத் துவங்கினர். மாற்றத்தை நடைமுறைப்படுத்துவதில் அவர்கள் எங்களுக்கு உதவிகூடச் செய்தனர்.”

“அவர்கள் ஏன் மாறினர் என்று நீ நினைக்கிறாய்?” என்று கோரி கேட்டாள்.

“சக ஊழியர்களின் கட்டாயப்படுத்துதல் குறைந்த பிறகு அவர்கள் மாறினர்.”

அங்கிருந்தவர்களைப் பார்த்து மைக்கேல், “நீங்கள் வேலை பார்த்து வந்துள்ள பெரும்பாலான நிறுவனங்களில், மேல்மட்ட நிர்வாகத்தினர் ஒரு

மாற்றத்தைத் தங்கள் ஊழியர்களிடம் அறிவிக்கும்போது என்ன நிகழ்கிறது? பெரும்பான்மையான மக்கள், மாற்றம் ஒரு சிறந்த யோசனை என்று கூறுகின்றனரா அல்லது ஒரு மோசமான யோசனை என்று கூறுகின்றனரா?" என்று கேட்டான்.

"ஒரு மோசமான யோசனை என்றுதான் அவர்கள் நினைக்கின்றனர்," என்று ஃபிராங்க் பதிலளித்தான்.

"அது ஏன்?" என்று மைக்கேல் கேட்டான்.

அதற்குக் கார்லோஸ், "ஏனெனில், எல்லா விஷயங்களும் மாறாமல் அப்படியே இருக்க வேண்டும் என்று மக்கள் விரும்புகின்றனர். மாற்றம் தங்களுக்கு மோசமான விளைவைக் கொண்டுவரும் என்று அவர்கள் நினைக்கின்றனர். மாற்றம் ஒரு மோசமான யோசனை என்று ஒரு நபர் கூறும்போது, மற்றவர்களும் அதை ஆமோதிக்கின்றனர்," என்று கூறினான்.

"மாற்றம் ஒரு மோசமான யோசனை என்று அனைவரும் நினைப்பதில்லை. ஆனால், தங்கள் சக ஊழியர்கள் தங்களை ஒதுக்கி வைத்துவிடக்கூடாது என்று அவர்கள் பயப்படுவதால், தாங்களும் அவர்களில் ஒருவராக இருக்க வேண்டும் என்பதற்காக அவர்கள் அக்கருத்துக்கு உடன்படுகின்றனர். சக ஊழியர்களிடம் இருந்து வரும் அப்படிப்பட்ட வற்புறுத்தல்கள்தான் எந்தவொரு நிறுவனத்திலும் மாற்றத்தை எதிர்ப்பதில் முக்கியப் பங்கு வகிக்கின்றன."

"மக்கள் சீஸ் கதையைக் கேட்டப் பிறகு விஷயங்கள் எவ்விதத்தில் மாறின?" என்று பெக்கி கேட்டாள்.

"சக ஊழியர்களின் வற்புறுத்தல் மாறியது. யாரும் ஹெம்மைப்போல் இருக்க விரும்பவில்லை," என்று மைக்கேல் கூறினான்.

அனைவரும் சிரித்தனர்.

"மாற்றம் ஏற்பட்டவுடன் புலம்பிக் கொண்டு, இருந்த இடத்திலேயே இருப்பதற்குப் பதிலாக, எதிர்வரும் மாற்றங்களை முன்னதாகவே அடையாளம் கண்டுகொண்டு, விரைவாகச் செயலில் இறங்க அவர்கள் விரும்பினர்," என்று மைக்கேல் கூறினான்.

“அது ஒரு நல்ல கருத்து. எங்கள் நிறுவனத்திலும் எவரும் ஹெம்மைப்போல் இருக்க விரும்ப மாட்டார்கள் என்று கருதுகிறேன். அவர்கள் மாறவும் கூடும். கடந்த முறை நாம் அனைவரும் ஒன்றுகூடியபோது நீ ஏன் இக்கதையைக் கூறவில்லை? இக்கதை நிச்சயம் பலன் தரும் என்று நான் நினைக்கிறேன்,” என்று நேத்தன் கூறினான்.

“அது நிச்சயமாகப் பலன் தருகிறது,” என்று மைக்கேல் கூறினான்.

“உன் நிறுவனத்தில் உள்ள ஒவ்வொருவரும் இக்கதையைத் தெரிந்து வைத்திருக்க வேண்டும். அப்போதுதான் இது சிறந்த பலனளிக்கும். அது ஒரு பெரும் நிறுவனமாக இருக்கலாம் அல்லது ஒரு சிறிய வியாபாரமாக இருக்கலாம் அல்லது உங்கள் குடும்பமாக இருக்கலாம். இவற்றில் மாற்றம் நிகழ வேண்டுமென்றால், இவற்றிலுள்ள பெரும்பான்மையான மக்கள் மாற வேண்டும்.”

பிறகு கடைசியாக அவன் மற்றுமொரு யோசனையையும் தெரிவித்தான். “இந்தக் கதை சிறந்த பலனளிக்கிறது என்பதை நாங்கள் கண்டுகொண்ட உடன், நாங்கள் எங்கள் வாடிக்கையாளர்களுக்கும் இக்கதையைக் கூறினோம். அவர்களும் மாற்றத்தைச் சந்தித்துக் கொண்டிருந்தனர் என்பதை நாங்கள் அறிந்தோம். அவர்களது ‘புதிய சீஸ்’ ஒருவேளை நாங்களாக இருக்கக்கூடும் என்று அவர்களுக்குப் பரிந்துரைத்தோம். அதாவது, இணைந்து செயல்பட்டால் இருவரும் பரஸ்பர வெற்றி பெறுவதற்கான வாய்ப்புகள் அதிகரிக்கும் என்று அவர்களிடம் கூறினோம்.”

அது ஜெஸிக்காவிற்குப் பல நல்ல யோசனைகளைக் கொடுத்தது. அதோடு, அடுத்த நாள் காலையில் அவள் வெகு சீக்கிரமாக ஒருசில தொழில் தொடர்பான அழைப்புகளை மேற்கொள்ள வேண்டியிருந்ததையும் அது அவளுக்கு நினைவூட்டியது. அவள் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, “நான் இந்த சீஸ் நிலையத்தைவிட்டுக் கிளம்பி, புதிய சீஸைக் கண்டுபிடிப்பதற்கான நேரம் வந்துவிட்டது என்று நினைக்கிறேன்,” என்று கூறினாள்.

குழுவினர் அனைவரும் சிரித்தனர். பிறகு அவர்கள் ஒவ்வொருவராக விடைபெற்றனர். உரையாடலைத் தொடர அவர்களில் பலர் விரும்பினாலும், புறப்பட வேண்டிய நேரம் வந்துவிட்டிருந்தது. அவர்கள் அங்கிருந்து புறப்பட்டபோது மைக்கேலுக்கு நன்றி கூறினர்.

“இக்கதை உங்களுக்குப் பயனுள்ளதாக அமைந்தது பற்றி நான் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். விரைவில் மற்றவர்களிடம் இக்கதையை நீங்கள் பகிர்ந்து கொள்வதற்கான வாய்ப்புகள் கிடைக்கும் என்று நான் நம்புகிறேன்,” என்று மைக்கேல் கூறினான்.

## முற்றும்

## மொழிபெயர்ப்பாளரைப் பற்றி

# நாகலட்சுமி சண்முகம்

நாகலட்சுமி ஒரு மிகச் சிறந்த ஊக்குவிப்புப் பேச்சாளர். அமெரிக்காவின் தலைசிறந்த பேச்சாளர்களில் ஒருவரும், 'சிக்கன் சூப் ஃபார் த சோல்' புத்தக வரிசையை உருவாக்கியவருமான ஜாக் கேன்ஃபீல்டின் 'வெற்றிக் கொள்கைகள்' பயிலரங்கை நடத்துவதற்கு அவரிடம் நேரடியாகப் பயிற்சி பெற்றவர் இவர்.

இவர் ஒரு சிறந்த மொழிபெயர்ப்பாளரும்கூட. கடந்த ஏழு ஆண்டுகளில் எழுபதுக்கும் மேற்பட்ட நூல்கள் இவருடைய மொழிபெயர்ப்பில் வெளிவந்துள்ளன. இவருடைய மொழிபெயர்ப்புக்குக் கிடைத்துள்ள அங்கீகாரங்களில் 2014ல் திருப்பூர் தமிழ்ச் சங்கம் அளித்த 'தமிழ் மொழிபெயர்ப்புத் துறைக்கான சிறப்பு விருதும்,' இவர் மொழிபெயர்த்த 'இறுதிச் சொற்பொழிவு' நூலுக்கு 2014ல் வழங்கப்பட்ட 'நல்லி திசை எட்டும் மொழியாக்க விருதும்' அடங்கும். 2017 மே மாதம் தமிழக அரசு சிறந்த மொழிபெயர்ப்பாளருக்கான விருதை நாகலட்சுமிக்கு வழங்கி கௌரவித்துள்ளது.

தமிழ் நாடகத் துறையின் முன்னோடி மேதைகளான டி.கே.எஸ். சகோதரர்களில் ஒருவரான திரு. முத்துசாமி அவர்களின் பேத்திகளில் ஒருவர் இவர். இவர் தற்போது தன் கணவருடனும் தன் குழந்தைகள் இருவருடனும் மும்பையில் வசித்து வருகிறார்.

தம்பதியருக்கு இடையேயான உறவுகளை மேம்படுத்துவதற்கு உதவும் இவரது முதல் சுயபடைப்பான 'மாயாஜாலமான மணவாழ்க்கை - மறந்து போன ரகசியங்கள்' என்ற நூல் சமீபத்தில் வெளியாகிப் பெரும் பாராட்டுக்களைப் பெற்றுள்ளது.

## நூலாசிரியரைப் பற்றி

# ஸ்பென்சர் ஜான்சன் (1938-2017)

ஸ்பென்சர் ஜான்சன், சர்வதேச அளவில் பெரிதும் மதிக்கப்படுகின்ற சிந்தனையாளர் மற்றும் நூலாசிரியர். உலகெங்கும் விற்பனையில் சாதனைகளைக் குவித்துக் கொண்டிருக்கும் அவரது பத்துப் புத்தகங்களில், 'என் சீஸை நகர்த்தியது யார்?' நூலும் ஒன்று.

நியூயார்க் டைம்ஸ் விற்பனைப் பட்டியலில் முதலாம் இடத்தை வகித்த 'ஒரு நிமிட மேலாளர்' என்ற புத்தகத்தை, பிரபல நிர்வாக ஆலோசனையாளரான கென் பிளான்சார்டுடன் இணைந்து அவர் எழுதினார். அப்புத்தகம் இன்றும் வியாபாரம் தொடர்பான புத்தக விற்பனைப் பட்டியலில் இடம்பெற்று வருகின்றது. அதோடு, உலகிலேயே மிகவும் பிரபலமான நிர்வாக வழிமுறையாக அது விளங்கி வருகிறது.

ஸ்பென்சர் ஜான்சன் தென் கலிபோர்னியா பல்கலைக்கழகத்திலிருந்து உளவியலில் பி.ஏ. பட்டம் பெற்றார், 'ராயல் காலேஜ் ஆஃப் சர்ஜன்ஸ்' கல்லூரியிலிருந்து எம்.டி. பட்டம் பெற்றார். பின்னர் ஹார்வர்டு மருத்துவக் கல்லூரி மற்றும் மேயோ மருத்துவ மையத்தில் அவர் மருத்துவப் பயிற்சி பெற்றார். சமீபத்தில் ஹார்வர்டு பிசினஸ் ஸ்கூலில் 'லீடர்ஷிப் ஃபெல்லோ'வாக அவர் பணி புரிந்துள்ளார்.

அசோசியேட்டட் பிரெஸ், பிபிசி, சிஎன்என், ஃபார்சூன் பத்திரிகை, நியூயார்க் டைம்ஸ், டுடே ஷோ, டைம் பத்திரிகை, யுஎஸ்ஏ டுடே, யுனைட்டட் பிரெஸ் போன்ற ஊடகங்களில் அவரது படைப்புகள் அடிக்கடி இடம்பெற்றுள்ளன.

42 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள அவரது புத்தகங்களை உலகெங்கிலும் நான்கு கோடி மக்கள் படித்துள்ளனர். அவர் 2017ம் ஆண்டில் காலமானார்.